சென்னிகுளம் சிந்துக்கவிப் பேரரசு

# அண்ணாமலை ரெட்டியார் சுவாமியின்

# இதயக்குரல்



ஆ. ஸ்ரீராமுலு தேசிகன்

சென்னிகுளம் சிந்துக்கவிப் பேரரசு

**அண்ணாமலை ரெட்டியார் சுவாமியின்**

# இதயக்குரல்

(கோமதியந்தாதி - திறனாய்வு)


ஓய்வுபெற்ற நல்லாசிரியர், வைஷ்ணவ ரத்னம்,
தத்துவ தர்சனம்

**ஆ. ஸ்ரீராமுலு தேசிகன்**



**ஸ்ரீ கிருஷ்ணா பதிப்பகம்**

புதுச்செந்நெல்குளம்,

(வழி) ஸ்ரீவில்லிபுத்தூர் - 626 137.



கொடைவள்ளல், கல்வித் தந்தை
மதிப்புமிகு. ஸ்ரீமான் கே. இராமசாமி ரெட்டியார்
அவர்களுக்கு இந்நூல் சமர்ப்பணம்

# பதிப்புரை

'கலி' என்றால் 'கலகம்', 'பூசல்' என்ற பொருள்களும் உண்டு. கலி புருஷனின் ஆதிக்கம் குடும்பத்தில், சமுதாயத்தில், நாட்டில் இறைவனின் திட்டமாகவே செயல்பட்டாலும் கூட, உத்தம புருஷர்கள், நற்பணித் தொண்டர்கள் கலியின் அக்கிரமங்களை அழிக்கவே அயரா முயற்சியிலீடுபட்டுக் கொண்டிருப்பார்கள். அவர்களுக்குச் சூட்சுமமான உண்மைகளை உணர்த்தும் முறையில் கம்பீரமாக ஒலிக்கும் குரல் – சிந்துகவிப் பேரரசு அண்ணாமலை ரெட்டியார் சுவாமியின் இதயக் குரல்.

அனைத்தும் அனைவரும் கோமதித்தாயின் அங்கங்களாக இருக்கிறோம். அதனை மறந்து அவரவர் தம்மை அவளிடமிருந்து வேறாகவே நினைத்துத் தமக்கென்று அகங்கார மமகாரங்களை வளர்த்துக் கொண்டு ***'அவளை'*** அறியாமலிருக்கும், ***'மாயத் திரையை',*** அவளருளால் கிழித்துத் 'தற்செயல்', என்று நாம் நினைப்பவையெல்லாம் 'அவள், செயல்', என்ற அதி உன்னதமான பேருணர்வை உண்டாக்கும் மனிதனது சொரூப ஞானம் வழங்கும் குரல் – அண்ணாமலை ரெட்டியார் சுவாமியின் இதயக் குரல்.

உயர்குடி, செல்வம், கல்வி, அதிகாரம் ஆகியவற்றுள் செருக்குற்றுத் தம் புத்தியின் போக்கினால் உருவாக்கிக் கொள்ளும் ஏற்றத் தாழ்வுகளை, பேத உணர்வுகளை அகற்றிச் சமரச மனப்பான்மையுடன் ஒற்றுமையோடு வாழ வழிவகுக்கும் குரல் – அண்ணாமலை ரெட்டியார் சுவாமியின் இதயக் குரல்.

இக் குரலை வாசகர்கள் இதயங்களுக்கு உணவாக வழங்குவதற்கு உறுதுணையாக இருந்த **திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாருக்கு** நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். எமது முந்தைய வெளியீடுகளுக்கு ஆதரவு அளித்ததுபோல், இந்நூலுக்கும் ஆதரவளிக்க வேண்டுமென்று வாசகர்களைப் பணிவன்புடன் வேண்டிக் கொள்கிறோம்.

**A. ஸ்ரீராமுலு தேசிகன்**
**கிருஷ்ணா பதிப்பகம்,**
புதுச் செந்நெல்குளம்.

# பொருளடக்கம் :



மங்களம்!



*National Awardee*

**L. BALASUBRAMANIAN**

M.A., (English)
M.A., (Sociology)
M.A., (Political Science)
M.A., (Public Administration)
M.A., (Defence & Studies)
M.A., (Women's Studies)
M.A., (Population Studies)
M.Ed., M.Phil.,

☎ STD : 04563
Off : 620232
Resi : 620895

**Headmaster**
G.S. Hindu Higher
Secondary School,
**Srivilliputtur.**

Resi : 42, Tower Street,
**Srivilliputtur - 626 125.**

**Vice President**
Headmasters' Association, Tamilnadu

**Honorary Secretary**
Indian Council for Child Welfare (Child Labour Action Programme)
Srivilliputtur.

**Convener**
Junior Red Cross
Virudhunagar Educational District.

**Vice President**
Bharat Scouts & Guides
Virudhunagar Educational Dist.

நாள் : 1-02-2002

## அணிந்துரை

சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் என்ற பெயரைக் கேட்கும்பொழுதே நமது உள்ளம் பூரிக்கின்றது.

ஏனெனில்,

அவர் ஒரு கல்விச் சமுத்திரம்,

கமலாலயம்,

தமிழ்க் கடல் மடை திறந்த வெள்ளம்,

கற்பனைப் பிறப்பிடம்,

கலைமகள் இருப்பிடம்.

இத்தகைய சிறப்புமிக்க அண்ணாமலை ரெட்டியார் அவர்கள் 26 வயதே வாழ்ந்தாலும் தன்னுடைய நூல்களின் மூலம் தமிழ் இலக்கிய வரலாற்றிலே ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுள்ளார்.

நமது ரெட்டியார் சுவாமிகள் எல்லாம் வல்ல கழுகாசல மூர்த்தித் திருவருள் கொண்டு காவடிச் சிந்து, கோமதியந்தாதி, நவநீத கிருஷ்ணசுவாமி பிள்ளைத் தமிழ், வீரத் தல புராணம் போன்ற

பல நூல்களை இயற்றியுள்ளார். இவற்றில் கோமதியந்தாதி என்ற நூலில் 44 பாடல்களே கிடைத்துள்ளன. அவற்றைத் தேடி எடுத்து ஏற்கனவே புத்தகமாக அண்ணாமலை நினைவு விழாக் குழுவினர் வெளியிட்டுள்ளனர்.

இந்நூலின் அமைப்பிலும், பொருள் நயத்திலும், சொல் நயத்திலும் மயங்கிய எமது இனிய நண்பர் ஆன்மீகச் செம்மல், ஸ்ரீ வைஷ்ணவ திலகம், புதுச்செந்நெல்குளம் ஓய்வு பெற்ற நல்லாசிரியர் ஸ்ரீராமுலு தேசிகன் அவர்கள் 44 பாடல்களில் சில பாடல்களை எடுத்துக் கொண்டு 'ரெட்டியார் சுவாமியின் இதயக் குரல்' என்ற தலைப்பில் ஒரு சிறந்த ஆய்வை மேற்கொண்டுள்ளார்.

இந்தப் புத்தகத்தைக் கையில் எடுத்தவுடனே கீழே வைக்க மனமில்லாமல் பக்கங்கள் முழுவதையும் ஒரே மூச்சில் படிக்க நேர்ந்தது.

'உலகத்தில் வாழ வேண்டும்; உலக நெறியை அறிய வேண்டும்; ஆனால் உலகத்தோடு ஒட்டக் கூடாது' போன்ற சிறந்த கருத்துக்கள், பகவத் கீதை உபநிடதங்கள், பக்த கபீர், டாக்டர் இராதா கிருஷ்ணன், வேதங்கள், வேதாந்தம் ஆகியவற்றிலிருந்து விரிவாக மேற்கோள்களைக் காட்டி – கோமதி அந்தாதியின் சிறப்பை எளிய கவின்மிகு தமிழில் ஊற்றுப் பெருக்காகத் தெள்ளிய நீரோட்டமாகக் கொடுத்திருக்கிறார் ஸ்ரீராமுலு தேசிகன். அவர்களது பணி இன்னும் தொடர எல்லாம் வல்ல ஸ்ரீ முருகப் பெருமானை இறைஞ்சி வேண்டுகிறேன்.

உண்மையிலேயே இந்த இதயக் குரல் அனைத்து தரப்பு மக்களின் இதயங்களையும் தொட்டுத் தொடர்ந்து ஒரு புதிய பாரம்பரியத்தை உருவாக்கும் என்பதில் ஐயமில்லை.

*– எல். பாலசுப்பிரமணியன்*

**M. Puthiyavan**
M.A., (Eng.), M.A., (His), M.A., (Tamil), M.Ed., M.Phil.
Retd. Head Master
Hindi Pandit
Eminent Scholar in Astrology, Palm History and Samuthiriga Lakshana
ThirukKural Astavathani (குறளில் எண் வகை நினைவில் கலைஞன்)

Resi : 8/15, P.P. Kovil Street, Mamsapuram. Ph: 585506

## அணிந்துரை

சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் அவர்களை எண்ணும் பொழுது, உடல், உள்ளம், ஆன்மா பேருவகை பெறுகின்றது. குறுகிய காலத்தில் வாழ்வு பெற்றாலும், நீங்காத நினைப்பும், நிலைப்பும் துளிர் விட்டு வளர்ந்து கொண்டு வருகிறது. பூர்வ புண்ணிய தெய்வீக அம்சம் அடையப் பெற்று, உலக மக்களுக்கு தமது சிந்துக் கவிகளால் மக்களை முன்னேற்றம் காண உந்தச் செய்கிறார்.

Annamalai Reddiar – a Persuasive Poet and above all, a rare human being, who is a Man among men.

The Life Sri Annamalai Reddiar has been a remarkable career of achievement & fulfilment and we are tempted to ask after Kamban.

இந்நூலின் உருவாக்குதலில், ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் பண்பால் நமது இரக்கம் கருணை, ஜீவகாருண்யம், பந்தம், சொந்தம், பாசம், நேசம், பட்சம், விசுவாசம், அபிமானம், ஆன்மீகம், அருளுள்ளம், இறைவன்பால் பக்தி, காதல் முதலான உணர்வுகளைக் கருவிலே உற்ற திருவுடையவராய்ப் பெற்று வானொலி, திருக்கோயில்கள், சபாக்களில் ஆன்மீகச் சொற்பொழிவுகள் செய்து கொண்டிருக்கும் நண்பர் ஸ்ரீ வைஷ்ணவ திலகம், தத்துவ தர்சனம், நல்லாசிரியராம் ஸ்ரீராமுலு தேசிகன் அவர்கள் அண்ணாமலையவர்களின் கவிதைகளில் சிலவற்றை இதயக்குரல் என்ற முத்தரையிட்டு ஒரு சிறந்த ஆய்வு நூலை வெளியிட்டுள்ளார். அதில் மனதின் மறுமுனை தெய்வம் என தோற்றம் அளிக்கிறது.

*புலிமறவர் கையசைவு வீரம் காட்டும்*
*புலவர்களின் கையசைவு கவிதை தீட்டும்*
*ஒளிகடலின் அலைக்கரங்கள் முத்தை நீட்டும்*
*ஓடிவரும் பொன்னிநதி வளத்தைக் கூட்டும்*
*ஒளிநிலவு கதிரவனை இன்பங் கூட்டும்*
*உலகமொழி அத்தனையும் தமிழைக் காட்டும்*
*புலிமறவர் கூட்டத்தின் 'ஆ'! ஸ்ரீராமுலு தேசிகன்*
*பூக்கரங்கள் அசைவின்று எல்லாங் காட்டும்*

*கன்னியரின் கையசைந்தால் நடனமாகும்*
*கதிரவனின் கையசைவு வெப்பமாகும்*
*தென்றலின் கையசைவெல்லாம் மென்மையாகும்*
*தமிழ்மனுவின் கையசைவு நீதி கேட்கும்*
*கன்னித் தமிழ் சேரனின் கை அசைவு தன்னில்*
*கண்ணகிக்கு கல் சுமந்தார் வடக்கு வேந்தர்*
*தென்னகத்து ஸ்ரீராமுலு அறிஞர் தேசிகன்*
*திருக்கரங்கள் ''இதயக்குரலில்'' எல்லாம் செய்தார்.*

''இதயக்குரல்'' என்னும் இவ்வருந்தமிழ் ஆராய்ச்சி ஏட்டை எழுதியாக்கியவர், செந்நெல்குளம் ஆஞ்சநேய பக்தர், பேரறிஞர், ஸ்ரீராமுலு தேசிகன். இவரைத் தமிழுலகு நன்கறியும். பல நூல்களை எழுதிப் பண்பட்ட இவ்வறிஞரின் ஒப்புயர்வற்ற ஏடாக இதயக்குரல் விளங்குகின்றது.

கிடைத்தற்கரிய மணிகளையெல்லாம் ஒன்று திரட்டிக் கோர்த்து, இதயக்குரலென்னும் கருவூலமாகத் தத்துவதர்சனம் ஸ்ரீ ராமுலு தேசிகன் அளித்திருக்கின்றார். அவரமைத்த கோமதியந்தாதி திரனாய்வு பூங்காவிலே அனைவரும் சென்று எண்ணா இயலா வண்ணமலர்களை – என்றும் வாடா மணமுள்ள எழில் மலர்களை – தேன் பொழியும் வான்பூக்களைக் கொய்து, இதயக் குரல் மாலையாகத் தொகுத்துத் தமிழன்னைக்கு சூட்டியுள்ளார். அன்னாரின் நற்பணி மேலும் தொடர எல்லாம் வல்ல இறைவனை வணங்குகிறேன்.

**– எம். புதியவன்**

ஸ்ரீ:
ஸ்ரீராமஜெயம்
ஸ்ரீமதே ராமானுஜாய நம:
செந்நெல்குளம் க்ஷேத்திர நிவாஸாய மஹா யக்ஞ சொரூபாய
ஸ்ரீராம பக்த ஆஞ்சநேய ஸ்வாமினே நம:!!

# முன்னுரை

காமம் என்ற சொல் தமிழ் நூல்களில் எடுத்தாளப்பட்டாலும், இன்று இழிந்த பதமாகவே கருதப்படுகிறது. ஆனால் திருவள்ளுவர் காலத்தில் அப்படிக் கருதப்படவில்லை. அதனால் தான்அறம், பொருள், இன்பம் என்ற முப்பாலைப் பற்றி எழுதியவர், இன்பப் பகுதிக்குக் ''காமத்துப் பால்'' எனப் பெயரிட்டார்.

அப்பகுதி 'நாயகி நாயக பாவத்தில்', ஜீவான்மா பரமான்மாவிடம் அடையும் இன்பத்தைக் குறிப்பிடும்.

'தர்மத்திற்குக் கட்டுப்பட்ட காமத்தில் 'நான்' இருக்கிறேன்' என்று கீதாச்சாரியன் கூறுகிறான். (தர்ம விருத்தோ பூதேஷு காமோ அஸ்மின் பரதர்ஷப) இங்கு 'காமம்', இறையின்பத்தைக் குறிப்பிடுகிறது.

'விண்ணுலகில் வாழும் தேவர்களுக்குப் பூவுலகில் செய்யும் யாகத்தில் கொடுக்கப்படும் உணவே காமமென்றும், அதனைக் காட்டிலே திரிகின்ற ஒரு நரிக்குச் சமமான மனிதன் அனுபவிப்பதற்காக உன்னித்து எழும் எனது தடமுலைகளிருப்பின், நான் வாழ மாட்டேன், என்றும் கூறுகிறாள் ஆண்டாள் நாச்சியார். யாகத்தில் தேவர்களுக்குக் கொடுக்கப்படும் உயர்வான உணவுக்குச் சமமானது 'காமம்' என்று குறிப்பிடப்படுகிறது.

'நான் அனுபவிக்கும் உயர்ந்த பேரின்பம் கண்ணனெம்பெருமானே என்ற பொருளில், 'கண்ணனுக்கே ஆமது காமம்' என்று வாழ்ந்தவர், தெய்வத்திரு. ராமானுஜர் என்கிறார் அவரது சீடர் அமுதனார்.

அவரைப் போலவே சங்கரநயினார் கோவிலில் எழுந்தருளியுள்ள தெய்வத்தாய் 'கோமதியம்மையாருக்கே ஆமது காமம்', என்று வாழ்ந்தவர் அண்ணாமலை ரெட்டியார் சுவாமிகள்.

நிலையற்ற உணர்வுகளில் அனுபவிக்கும் உலகியல் காமங்களை மாற்ற நிலையான பேருணர்வில் அனுபவிக்கும் பகவத் காமத்தில் கோமதித் தாயாரிடம் (கோமதியந்தாதி பாடல்கள் மூலம்) ஈடுபட்டு, நம்மையும் ஈடுபடத் தூண்டும் குரலாக அவரது இதயக் குரல் ஒலிக்கிறது.

அந்த ஒலியானது இன்றைய கால கட்டத்தில் நடைபெறுகிற பல அராஜகச் செயல்களை அகற்றும். உருவாக்கும் – நல்லதொரு அமைதியான சூழ்நிலையை. தோற்றுவிக்கும் – தூய்மையான பக்தி நெறிகளை. தெளிவடையச் செய்யும் – சித்தத்தை.

செய்யும் செய்கைகள் அனைத்தையும் செம்மையுறச் செய்யும்; அதி உன்னதமான வாழ்க்கை முறைகள் அமைக்க உதவும்.

இன்சொல், உவமைகள், பொருளணிகள் முதலிய சொல்லணிகள் மூலமும், பாடல்களின் நடை, சொல்லும் திறன், மெய்பாடுகள் உருவாக்குதல், கற்பனை நயத்தால் இரசிகன் உள்ளம் ஒப்புமாறு எழுப்பிய உள்ளக் கிளர்ச்சிகளின் மூலமும் ரெட்டியார் சுவாமியின் இதயக் குரல் எழில்மிக்கதாகவும் ஆனந்தத்தைத் தருவதாகவும் ஒலிக்கிறது.

பூர்வ ஜென்மப் புண்ணியமும் நல்முயற்சியும் ஒருங்கே வாய்த்தவர்களது நற்செவிகளில், நல் இதயங்களில் அவரது இதயக் குரல் ரீங்காரம் செய்து கொண்டிருக்கும்; சிந்தனை அலைகளைக் கிளப்பிக் கொண்டிருக்கும்.

பொருளல்லாத அடியேனையும் பொருளாக்கும் பொருட்டு, அடியேனது இறைப் பணிகளுக்கு ஊக்கமளித்து வரும் கல்விமேதை, தேசிய விருது பெற்ற தலைமை ஆசிரியர் ***ஸ்ரீமான் L. பாலசுப்பிரமணியன்*** அவர்கள் இந்நூலிற்கு அணிந்துரை வழங்கியுள்ளார்கள். அவர்களுக்கு இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடியேனின் இனிய நண்பர், சிறந்த கல்விமானும், சிறந்த பேச்சாளருமான மம்சாபுரம் *ஸ்ரீமான் எம். புதியவன்* அவர்கள் இந்நூலிற்கு அணிந்துரை வழங்கியுள்ளார்கள். அவர்களுக்கு இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் எழுதுவதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்த ஆன்மீகச் செல்வர், கோவில்பட்டி வழக்கறிஞர் *ஸ்ரீமான் எஸ். இராமசாமி ரெட்டியார்*, B.A.,B.L., அவர்களுக்கும், பொருளுதவி செய்த சென்னிகுளம் தொழிலதிபர், ஆன்மீகச் செல்வர் *ஸ்ரீமான் கே. லட்சுமணப் பெருமாள் ரெட்டியார்* அவர்களுக்கும், கல்விக்கும், இலக்கியத்திற்கும், பக்தி நெறிகளுக்கும், பரமன் எழுந்தருளியுள்ள ஆலயங்களுக்கும், தாம் ஈட்டிய செல்வங்களை வரையாது வழங்கும் கோவில்பட்டி தொழிலதிபர், கொடைவள்ளல் *ஸ்ரீமான் கே. இராமசாமி ரெட்டியார்* அவர்களுக்கும் அடியேனது இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடியேனது இறைப்பணித் தொண்டுகளுக்கு வழக்கம் போல் ஆதரவளிக்கும் ஸ்ரீவில்லிபுத்தூர், தொழிலதிபர், இறைப்பணித் தொண்டர் *ஸ்ரீமான் பி. ரெங்கசாமி* நாயுடு அவர்களுக்கு இதயங்கனிந்த நன்றி உரித்தாகும்.

இந்நூலை நன்முறையில் அச்சடித்துக் கொடுத்த ஸ்ரீவி. நாராயணா கம்ப்யூட்டர் பிரஸ் உரிமையாளர், ஆஞ்சநேய பக்தர் *ஸ்ரீமான்* எம். வெங்கட **நாராயணன்** அவர்களுக்கும் இதயங்கனிந்த நன்றி உரித்தாகுக. வணக்கம்.

*செந்நெல்குளம் க்ஷேத்திர நிவாஸாய மஹா யக்ஞ சொரூபாய!*
*ஸ்ரீ ராம பக்த ஆஞ்சநேயாய மங்களம்!!*

அடியார்க்கடியன்

**ஆ. ஸ்ரீராமுலு தேசிகன்**

அறங்காவலர்

அருள்மிகு வரப்பிரசாதி ஸ்ரீராம பக்த ஆஞ்சநேயர் திருக்கோவில்
செந்நெல்குளம், (வழி) ஸ்ரீவில்லிபுத்தூர் - 626 137
விருதுநகர் மாவட்டம்.



நூலாசிரியர்

# ஆ. ஸ்ரீராமுலு தேசிகன்

அவர்களின்

## பிற நூல்கள்

1. கோதையும் கோவிந்தனும்
2. கோதை தமிழ் அமுதம்
3. நாராயணனைப் பாடிய நம் ஆழ்வார்கள்
4. தசாவதாரத் தத்துவங்கள் (21-6-1985 கோயம்புத்தூர் வானொலிப் பேச்சு)
5. கண்ணின் பாவைகள் (திருப்பாவை - திருவெம்பாவை திறனாய்வு)
6. பகவான் ஸ்ரீ கிருஷ்ண சரிதம்
7. பள்ளித் தலமனைத்தும் கோயில் செய்குவோம். (கம்பன் காட்டும் கல்வித் தத்துவம் - 18.2.93 மதுரை வானொலிப் பேச்சு)
8. கல்வித் தந்தை எஸ்.ஆர். நாயுடு.
9. சக்கரத்தாழ்வார் மகிமை.
10. வைஷ்ணவன் வன்மையானவன் (பெரியாழ்வாரின் சிந்தனைகள்)
11. செந்நெல்குளம் அருள்மிகு வரப்பிரசாதி ஸ்ரீராம பக்த ஆஞ்சநேயர் திருவுருவ அழகில் ஆக்கப்பூர்வமான சிந்தனைகள்.
12. திருப்பாவையில் வாழ்க்கை நெறி - பிரமாதி ஆண்டு மார்கழி மாத முழுவதும் (16-12-99 முதல் 14-1-2000 வரை) மதுரை வானொலியில் பேசிய பேச்சுக்கள்

## 1. ஏரம்ப விநாயகரைப் புகழ்தல்:

இறைப் பணியில் இறங்க முழுக் கல்வியறிவும், புத்திக்கூர்மையும் தேவை. மன இயல்புகளும் மாறுதல் அடைய வேண்டும். நிதானம், மன அமைதி மற்றும் தீர்க்க தரிசனம் ஆகிய பண்புகள் இன்றியமையாதவை.

சுருங்கக் கூறினால் புறவாழ்வும் அகவாழ்வும் முழு மாறுதல் அடைந்தே தீர வேண்டும். உடல், மனம் ஆகியவற்றின் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் திறன் அமைய வேண்டும்.

ஈடுபடும் வேலையின் ஆர்வத்தில் உறுதியும் திடமும் பூரணமாக இருக்க வேண்டும். குடும்பப் பற்றை ஒரு கட்டுக்குள் வைத்திருக்க வேண்டும்.

அதற்குச் சுய பரிசோதனை செய்து கொள்ள வேண்டும். நற்பண்புகளை விரிவுபடுத்திப் பலப்படுத்த வேண்டும். அது நிறைவேறுவதற்குச் சங்கர நயினார் கோயிலில் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு ஏரம்ப விநாயகரைப் புகழ்ந்து பாடுகிறார், சிந்துக்கவி பேரரசு, சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் சுவாமி.

இனி அவரை, 'நம் ரெட்டியார் சுவாமி', 'நம் சுவாமி', என்று சுருக்கமாக அழைப்போம்.

இறையுணர்வில் திளைக்க வேண்டும். பேரானந்தம் அடைய வேண்டும். இப்பிறவியை அர்த்தமுள்ளதாகச் செய்ய வேண்டும் என்பதற்காக நம் நலனில் தாய்ப்பாசங் கொண்டு தாம் கண்டு அனுபவித்த இன்பத்தை மற்றவர்களும் கண்டு அனுபவிக்க வேண்டி வேத உபநிடதங்களை அளித்துச் சென்றார்கள், நம் முன்னோர்கள். அவர்களின் சொற்களில் முழு நம்பிக்கை வைப்பதோடு நின்று விடாது, இறையுணர்வு பெற வேண்டிய வழிவகைகளில் முயற்சியைத் தொடர்ந்து செய்து ஒரு காலகட்டத்தில் தானும் இறையுணர்வு அடைவதற்கு கோமதி அந்தாதிப் பாடல்களின் மூலம் தம் இதயக் குரல் மக்கள் செவிகளில் படவேண்டும் என்பதற்காகச் சங்கரநயினார் கோவிலில் எழுந்தருளியுள்ள ஏரம்ப விநாயகரைப் புகழ்ந்து பாடுகிறார், நம் ரெட்டியார் சுவாமி.

வாழ்க்கையில் பொய்மை, தான் என்னும் செருக்கு, தன்னலம், குறுகிய கண்ணோட்டம் ஆகியவைகளை வரவிடாமல் வாழ்வும், வாக்கும்

இறையின்பமான தெய்வீக வாழ்க்கையைப் பெற வேண்டும் என்று ஏரம்ப விநாயகரைப் புகழ்ந்து பாடுகிறார்.

இறை வழிபாட்டில் முக்கியமாகக் கொள்ள வேண்டியது உருவம் அல்ல; குரு அருளால் நம்பிக்கையில் உருவாகும் **பாவனையே.**

''யாதும் ஓர் பற்றில்லாத பாவனை கூடில் அவனையும் கூடலாமே'' என்று பாவனா சக்தியினைப் புகழ்ந்து கூறுவார், ஞானி நம்மாழ்வார்.

அந்த பாவனா சக்தி உள்ளத்தில் மேலோங்கி, ''சர்வம் சக்தி மயம் ஜகத்'' என்று பிரபஞ்சத்தில் எல்லாத் தோற்றத்திலும் விளங்குகிற அன்னை கோமதித் தாய் தெய்வ சம்பந்தாகத் தமக்குக் கிடைத்துள்ளாள். அவள் அருட் கடாட்சத்தினால் ஜென்மாந்தர வாசனைகளால் விரோதமான நெறிகளை விட்டுத் திரும்பிய தம் நெஞ்சத்தைக் கொண்டாடி ஏரம்ப விநாயகரைப் புகழ்ந்து பாடுகிறார்.

*''பாரம்பரியம் புகழ் சேர் புன்னாகப் பதி உறைவாள்*
*கூர் அம்பு அரி அம்பு கம்கை கொண்டார் பங்கு*
*உறை பரை முத்*
*தாரம் பரி அம் புதுத் தனக் கோமதியாள் துதிசேர்*
*ஏரம்பர் இயம்புவார் என்தன் நா இருந்து என்றைக்குமே.''*

என்பது ரெட்டியார் சுவாமியின் வாக்கு.

*(புன்னாகப் பதி – புன்னை மரத்தைத் தலவிருட்சமாக; கூர் அம்பு, அரி அம்பு – நிறைந்த கங்கையாகிய நீரையும் திருமாலாகிய அம்பையும்)*

அருள்மிகு கோமதி அம்மையின் தோத்திரமாகிய கோமதி அந்தாதி, என்னும் இந்நூலை இயற்றப் போகிறேன். அதற்கு எப்பொழுதும் என் நாவில் விநாயகப் பெருமான் தங்கியிருந்து உறுதுணை செய்வதற்காக வணங்கித் துதித்து இந்நூலைத் தொடங்குகிறேன் என்பது கருத்தாகும்.

## 2. முத்தாரம் பரிஅம் புதுத் தனம் கோமதியாள்

ஆயுள், அலைபோல் சஞ்சலமானது, இளமையின் அழகு இருப்பது சில நாட்களே, மனதில் எழும் எண்ணங்களைப் போல் உடைமைகள் நிலையற்றவை. போகங்களின் கூட்டங்கள் மேகங் கூடிய சமயத்தில் தோன்றும் மின்னல்களைப் போல் சுழல்பவை. இவையனைத்தும் நீடித்திருப்பதில்லை.

ஒரு புலியைப் போல் மூப்பானது பயமுறுத்திக் கொண்டேயிருக்கிறது. பகைவர்களைப் போல் நோய்கள் உடலைத் தாக்குகின்றன. ஓட்டைக் குடத்து நீர் போல ஆயுளானது ஓடிக்கொண்டேயிருக்கிறது.

இவற்றையெல்லாம் உணர்பவர்களே குரு அருளைப் பெற்றவர்கள். அவர்களே பக்தியோகத்தால், சரணாகதியால் பாரில் மேன்மை அடைவார்கள்; சித்தம் தெளிவடைவார்கள்; செய்யும் செயல்களில் செம்மையுற்று விளங்குவார்கள்; ஒரு நொடியில் மிச்சமில்லாமல் துக்கம் அனைத்தையும் போக்கடிக்கக் கூடியதும் உயர்நலம் தருவதுமாகிய ஆன்மீக நாட்டத்தைக் கைக் கொள்வார்கள்.

இறையின்பக் கடலில் மூழ்கித் திளைக்கும் அந்த அடியார்களை முத்துக்களாகப் பாவனை செய்து பாடுகிறார், நம் ரெட்டியார் சுவாமி.

முத்துக்களால் ஆகிய ஆரத்தைத் தாங்கிக் கொண்டிருக்கின்ற இளமை பொருந்திய தனபாரத்தையுடையவள் கோமதித்தாய் என்ற பொருளில், **'முத்தாரம் பரி அம் புதுத்தனம் கோமதியாள்'** என்பது அவர் கூறும் வாக்கு.

திறந்த முத்துச் சிப்பியில் சுவாதி நட்சத்திரத்தன்று மழைத் துளி விழும் பொழுது அந்தச் சிப்பி முத்தினைப் பெறும். மழைத் துளிகள் புகாத சிப்பிகளில் முத்துக்கள் உருவாக மாட்டாது என்பது ஆன்றோர்களின் நம்பிக்கையாகும்.

அந்த முத்துச் சிப்பியைப் போல் ஊனக் கண்களால் காணமுடியாத கோமதித் தாயின் உருவம் பக்தனின் பாவனா சக்தி மேலோங்கி அவளைப் பார்க்கும்பொழுது, அவளது நெஞ்சு என்னும் அகக் கண்ணிலிருந்து புறப்படும் அருளொளி அந்த பக்தனின் இதயத்தில் பாயும்.

அப்பொழுது அவன் முத்துக்களைக் கொண்ட சிப்பிகளைப் போல் வைராக்கியம் முதிர்வு பெறுவான்; அடியாராகத் திகழ்வான்.

அவனையொத்த அடியார்களை ஆரமாகத் தாங்கிக் கொண்டுள்ள கோமதித்தாய், **முத்தாரம் பரி**, என்று விளிக்கப்படுகிறாள், நம் ரெட்டியார் சுவாமியால்.

அவளது இளமை பொருந்திய தனபாரங்கள், அவளை அடைக்கலமாகக் கொண்டுள்ள அடியார்களின் ஞான, வைராக்கியத்தைக் குறிக்கும். அவை, **'அம் புதுத்தனம்'**, என்று குறிப்பிடப்படுகிறது.

பூலோக வைகுண்டம் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் வைகுண்ட ஏகாதசி திருவிழா நாட்களில் ஸ்ரீரெங்கநாதப் பெருமான் முத்தங்கி சேவையோடு பக்தர்களுக்குக் காட்சி தருவான். தன்னை அடைக்கலங் கொண்ட அடியார்களின் உள்ளத்தையே முத்தங்கியாக அணிந்து குறிப்புணர்த்துகிறான், என்பதை அறிய வேண்டும்.

## 3. மதிக்குள் மற்றோர் தெய்வம் நாடத் துணிந்திலம்

*திருக் கோமதிக்கு வரராசை வாழும் திகம்பரிக்கு*
*ஈசருக்கு ஓம் அது இக்குரசம் எனச் சொற்றவன் தந்தவட்குக்*
*குருக் கோமதிக் குளிர் ஆனைத் தாட்கு அன்பு கூர்வது*
*அல்லால்*
*சுருக்கோ மதிக்குள் மற்றோர் தெய்வம் நாடத் துணிந்திலமே.*

*(வரராசை – சங்கர நயினார் கோவில்; திகம்பரி – எட்டு திசைகளை ஆடையாக உடைய கோமதி)*

சங்கர நயினார் கோயிலில் எழுந்தருளியிருக்கும் கோமதியம்மை இடத்துப் பக்தி செலுத்தி வாழ வேண்டும். அதுவே நன்மை அளிக்கும். அது தவிர நல்ல நிலைமை அடைவதற்கு வேறு சுருங்கிய வழி ஒன்றுமில்லை.

தம் புத்திக்கு எட்டின மட்டிலும் ஆராய்ந்து பார்த்ததில் இந்தக் கோமதி அம்மையைத் தவிர வேறு ஒரு தெய்வத்தைப் பக்திமேலிட்டால் வழிபட மனம் துணியவில்லை என்பது ரெட்டியார் சுவாமியின் திடமான கருத்தாகும்.

**'மதிக்குள் மற்றோர் தெய்வம் நாடத் துணிந்திலம்'** என்பது அவர் வாக்கு.

ஒவ்வொரு மாட்டுக்கும் தனித்தனியே மூக்கணாங்கயிறு போடுவதோடு, அவற்றையெல்லாம் சேர்த்துக் கயிறு போட்டுக் கட்டிக் காரியங்களைச் செய்து கொள்வதுபோல், ஜீவான்மாக்களுடன் லீலைகள் செய்யும் இறைவன், அவற்றில் சிலவற்றை அவிழ்த்து விடவும் செய்கிறான். அவர்களே தெளிந்து உறுதி பெற்றுள்ள மெய்ப் பொருள் காட்சி நன்கு புலனாகும் உள்ளம் பெற்றவர்களாவர்.

அப்படி அவனால் அவிழ்த்து விடப்பட்ட நம் ரெட்டியார் சுவாமிக்கு கோமதி அம்மையார், பிரகாசம் பொருந்திய பூரண சந்திரனைப் பெற்ற குளிர்ந்த கருணை பூத்திருக்கின்ற முகமுடையவளாகக் காட்சியளித்தாள்.

**குருக் கோமதிக் குளிர் ஆனைத்தாள்,** என்பது அவர் வாக்கு.

அப்படிப்பட்டத் திருமுகம் கோமதியம்மையார் பெற்றமைக்குக் காரணம், சிவபெருமானுக்கு 'ஓம்' என்கிற பிரணவ மந்திரத்தின் பொருளை மிகவும் இனிமை ததும்பக் கரும்புச் சாறுபோல் உபதேசித்த முருகப் பெருமானை மகனாகப் பெற்றெடுத்து அருள்பாலித்தமையே யாகும் என்கிறார்.

**''ஈசருக்கு ஓம் அது இக்கு ரசம் எனச் சொற்றவர் தந்தவள்''** என்பது ரெட்டியார் சுவாமியின் வாக்கு.

'உரு ஏறத் திரு ஏறும்' என்பது பழமொழி. 'ஓம்' என்ற பிரணவ மந்திரம் சதா ஜபிக்கும் உள்ளத்தைப் பெற்ற முகம் பிரகாசமாகக் காட்சி அளிக்கும் என்ற குறிப்பு, கோமதித்தாயின் முகம் மூலம் ஈண்டு உணர்த்தப்படுகிறது.

கடவுளின் அருள் பெற்ற நல்ல பக்தர் ஏழ்மைக்கும் மற்ற துன்பங்களுக்கும் மத்தியில் மகிழ்ச்சியுடன் இருக்கிறார். துன்பங்களைத் தானாகவே வரவேற்கிறார். துன்பமே இந்த உலகில் சிறந்த பொருள், ஏனெனில் துன்பப்படுபவர்தான் கடவுளை நினைப்பார்.

'உன்னை எந்நிலையிலும் மறவாமலிருக்க துன்பங்களைக் கொடு' என்று குந்திதேவி கிருஷ்ணனிடம் பிரார்த்திப்பதை சிந்திக்க வேண்டும். 'துயரங்கள் செய்து தன் தெய்வநிலை உலகில் புக உய்க்கும் அம்மான்' என்று இறைவனைப் பற்றிக் கூறுவார், ஞானி நம்மாழ்வார்.

அடியார்களுக்கு அதிசயிக்கத்தக்க சகிப்புத் தன்மையைத் துன்பங்கள் மூலம் தருகிறான் இறைவன். துன்பங்கள் அனுபவிக்கும் அளவுக்கு மனிதன் செய்த கர்மச் சுமைகள் குறைகிறதென்றும், முக்தி நெருங்குகிறதென்ற பேருண்மையை அவனே உணர்த்துகிறான்.

சம்சார சாகரத்தில் திக்குத் தெரியாது துன்பங்களால் தவிப்போருக்கு வேதத்தின் சாரமான 'ஓம்', என்ற பிரணவ மந்திரமே நட்சத்திர தீபமாக விருந்து மார்க்கம் காட்டும்.

பக்தியில்லாதார், குரு அருள் இல்லாதார், ஜீவதயை இல்லாதார் அந்தப் பிரணவ மந்திரத்தை ஜபிக்கவே முடியாது. அப்படியே ஜபித்தாலும் பயன் இராது.

நாரதர் குருவாக இருந்து ஐந்து வயதுப் பிள்ளை துருவனுக்கு மந்திரோபதேசம் செய்தார். அவன் எவராலும் ஜயிக்க வொண்ணாத பகவானையும் தன் பக்தியால் ஜயித்து விட்டான்.

அறிகின்ற கண்களுக்குப் புரிகின்ற சக்திதனைக் கொடுக்கின்ற குருவே இனிமை தரும் கரும்புச் சாறுபோல் உபதேசித்துச் சீடனின் அறிவுக் கண்களைத் திறப்பார். உபதேசம் சரியாகச் செயல்படவில்லையானால் சீடர்களின் கதி, பட்ட மரத்தில் வாழ நினைத்த பச்சைக்கிளியின் கதிதான்.

இறைவனது சொரூபம், அடையும் மார்க்கம், அடையும் ஜீவான்மாவின் சொரூபம் ஆகிய மூன்றும் அகரம், உகரம், மகரம் என்னும் பதங்களில் குறிப்பிடப்படும். இந்த மூன்றும் சேர்ந்ததே 'ஓம்' என்னும் பிரணவ மந்திரமாகும்.

அதனை உபதேசித்த முருகனைப் பெற்ற கோமதித்தாயின் முகம் பூர்ண சந்திரனோடு ஒப்பிட்டு அவளை வழிபடும் தெய்வமாக மட்டும் நினைக்கவில்லை; மந்திரோபதேசம் செய்த அடியேனது குரு, என்றும் குறிப்பிடுகிறார், ரெட்டியார் சுவாமி.

அதனால் தான் கோமதித்தாயைத் தவிர, **'எம்மதிக்குள் மற்றோர் தெய்வம் நாடத் துணிந்திலம்'** என்று தெளிவோடு கூறுகிறார்.

## 4. இடைந்த என் ஏழை நெஞ்சே!

*திலகம் தரிக்கும் சிறு திங்களார் மயல் சிக்கு இடைப்பட்டு*
*இலகு அம் திரு இக்கு மென் சொல்லால் இடைந்த*
*என் ஏழை நெஞ்சே*
*நல கந்தார் இக்குஞ்சரம் பால் அருந்தும் நகில சலஞ்*
*சல சுந்தரிக்கும் வரராசையில் சொல் நித்தம் கவியே.*

பெண்களின் ஆசையாகிய மயக்கத்திலீடுபட்டாய், அவர்கள் இன் சொல்லுக்கு ஏங்கினாய்; அதனால் வருத்தமும் பட்டாய்; ஏ! அறிவற்ற மனமே! முருகப் பெருமான், விநாயகக் கடவுள் ஆகியோரின் தாய், சங்கர நயினார் கோயிலில் எழுந்தருளியுள்ள கோமதியம்மையார், அவளைத் தினந்தோறும் பாடுவாயாக! துதித்துப் போற்றுவாயாக!

'வருந்திய எனக்கு வாய்த்த அறியாமையோடு கூடிய ஏழை மனமே; என்ற பொருளில் **'இடைந்த என் ஏழை நெஞ்சே!'** என்று தம் நெஞ்சோடு தன்னுணர்வில் பேசுகிறார், நம் ரெட்டியார் சுவாமி.

மயக்கமாகிய் துன்பப் பிடியில் அகப்பட்டுக் கொண்டு மேன்மையாய் விளங்குகின்ற கேட்போரை வசப்படுத்தவல்ல கரும்பு போன்று இனிமையைத் தரும் மென்மை தரும் சொற்களால் பாதிக்கப்பட்டு உணர்ந்தும், அவைகளை மீள முடியாமலிருப்பதே வருத்தத்திற்குக் காரணமாகும்.

துன்பப் பிடியில் அவரை அகப்படுத்தியவர்கள் யாரென்று ஓர் வினா எழுப்பினால், 'நெற்றியில் மங்கலமாக விளங்கும் மஞ்சள் பொட்டினை அணிந்த பிறைச் சந்திரன் போன்ற அழகிய நெற்றியையுடைய பெண்களே, என்ற விடை, ரெட்டியார் சுவாமியின் திருப்பவள வாயிலிருந்து வெளிப்படுகிறது.

*''திலகம் தரிக்கும் சிறு திங்களாற் மயல் சிக்கு இடைப்பட்டு*
*இலகு அம் திரு இக்கு மென் சொல்லால் இடைந்த என்*
*ஏழை நெஞ்சே'',*

என்பது அவர் வாக்கு.

ஒரே சூரியன் இருந்தாலும், பிரதி பிம்பங்களில் விழும் பொருள்களைப் பொறுத்து மாறுபாடு தோன்றலாம்.

அதுபோல் புலன்கள், மனம், புத்தி இவைகளெல்லாம் பிரதிபிம்பங்கள். கர்ம வினைகளாலும் ஜென்மாந்திர வாசனைகளாலும் இவைகளது உணர்வுகளில் மாறுபாடுகள் தோன்றலாம்.

பிரதி பிம்பங்களுக்கு அப்பால் சூரியன் இருப்பதுபோல், புலன்கள், மனம், புத்தி இவைகளுக்கு அப்பால் உண்மைப் பொருளான ஆத்மா உள்ளது.

அந்த ஆத்மாவை இறைவனருளால் உணர்ந்த நம் ரெட்டியார் சுவாமி, தன் மனமும் புத்தியும், ஆசை, வெறுப்பு, இச்சை முதலிய மனோ வியாதிகளாலும் ஜென்மாந்திர வாசனைகளாலும் அடிபட்டு வெளியுலகப் பொருள்களில் மயங்கி மீள முடியாமலிருப்பதை உணர்ந்து, **'இடைந்த ஏழை நெஞ்சே'**, என்று வருத்தமுடன் கூறுகிறார்.

உள்ளத் தூய்மையும் மன ஒழுங்குப் பாடும்தான் யோகத்தின் கருங்கல் அஸ்திவாரமாகும்.

அது நம் சுவாமிக்கு ஏற்பட்டுவிட்டபடியால் விடுதலை வேட்கையால் தானாக உந்தப்பட்டார், தன்னுயிர் தான் அறப் பெற்ற நிலையில், தன்னுணர்வு பெற்ற நிலையில், 'ஏழை நெஞ்சே' என்று கூறுகிறார்.

செல்வம் ஏற்படுவது - நல்ல மங்களகரமான செயல்களின் மூலமே. அது வேரூன்றப்படுவது - மனிதனின் செயல் திறமையின் மூலமே. அது மேலும் மேலும் விரிவடைவது - உழைப்பின் மூலமே. மனக்கட்டுப்பாடுடன் வாழ்ந்தால் அந்தச் செல்வம் நீடித்து நிலைபெறும்.

ஆண், பெண் மனக் கட்டுப்பாடுடன் வாழ்ந்து புலன்களை நெறிப்படுத்துவதற்காகவே, 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற இல்லற தர்மம் ஏற்பட்டுள்ளது.

'அறத்தின் இயல்போடு இல்வாழ்க்கை வாழ்கின்றவன், வாழ முயல்கின்ற பல திறத்தாரிலும் மேம்பட்டு விளங்குகின்றவன் ஆவான்' என்பது வள்ளுவர் கருத்து.

'இயற்கை' என்னும் பல்கலைக்கழகத்தில் பாடங்கள் கற்றுத் தம்பதிகள் தங்களது புலனுணர்வுகளைச் செம்மைப்படுத்தி ஆன்மீக இலட்சியத்தை அடைவதற்கு ஏற்பட்டதே இல்லறமாகும்.

அதில் என்ன காரியம் செய்தாலும் அதை இறைவனுக்கு அர்பணம் செய்யும் உள்ளத்தையும், **'தான் இறைவனின் ஒரு கருவியே'** என்று எண்ணும் பயிற்சியையும் மேற்கொள்ள வேண்டும். அதைத் தம்முடைய செயலாகக் கருதக் கூடாது.

**பகவானே அவன் ஆராதனமான இந்தக் கர்மாவை அவனது உகப்பிற்காக அவனுக்கு அடிமையான என்னைக் கொண்டு செய்து கொள்கிறான் என்ற எண்ணத்தில் செய்ய வேண்டும்.**

எந்தக் காரியமாக இருந்தாலும் அதன் உற்பத்திக்கு ஐந்து காரணங்கள் உண்டு என்கிறது கீதா சாஸ்திரம். 1. உடல், 2. ஜீவன், 3. வெவ்வேறு வகையான புலனுணர்வுகள் 4. பல உட்பிரிவுகளைக் கொண்ட பிராண வாயுவின் (மூச்சுக் காற்றின்) பல பிரகாரமான சஞ்சாரம் 5. பரமாத்மா என்று ஐந்து பேர்கள் காரியத்தில் ஈடுபடுகிறார்கள்.

அப்படியிருக்கும் பொழுது தன்னை மாத்திரம் எவ்விதத் துணையுமின்றிக் கர்த்தாவாக நினைப்பவன் தெளிவான புத்தியில்லாதவன்; விபரீதமான புத்தியுள்ளவனும் ஆகிறான்.

ரெட்டியார் சுவாமி கோமதியம்மை அருளால் மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர். தெளிவான புத்தியுடையவர்.

எனவே அவர் திருப்தியான பிரம்மச்சரிய வாழ்க்கை – அதாவது ஆன்ம அறிவான பிரம்மத்தைச் சார்ந்து வாழும் வாழ்க்கை வேண்டும் என்று இறைவனிடம் பிரார்த்திக்கிறார்.

அதற்காக அவர், 'யாவர்க்கும் நன்மையைத் தரவல்ல முருகப் பெருமானுக்கும் எங்கும் காட்சிதரும் விநாயகப் பெருமானுக்கும் அமுதம் போன்ற பாலைக் கொடுத்துள்ள தனம் உடையவளும் மேலான சங்கு போன்ற கழுத்தையுடையவளுமான கோமதியம்மையை வணங்க வேண்டும். தினந்தோறும் அவளிடத்துப் பக்தி ஏற்பட, அவள் பெருமைகளைப் பற்றிக் கூறுவதாயுள்ள பாடல்களைப்பாடித் துதிப்பாயாக' என்று தமது மனதிடம் கூறுகிறார்.

*''நல் கந்தர் இக்குஞ்சரம் பால் அருந்தும், நகில சலஞ்*
*சல கந்தரிக்கும் வரராசையில் சொல் நித்தம் கவியே''*

என்பது அவர் வாக்கு

*(குஞ்சரம் – விநாயகப் பெருமான்; சலஞ்சலம் – மேலான சங்கு போன்ற; வரராசை – சங்கர நயினார் கோயில்)*

மந்த புத்தியோடு திலகந்தரிக்கும் சிறு திங்களாற் மயலில் வாழ்நாள் முழுவதும் சிக்கிக் கொண்டு மீள முடியாமல் வாழும் மந்த பாக்கியம் உடையவர்களது சிக்கல் எடுக்க, கோமதியம்மையாரை வழிபட்டு, அவள் புகழைப் பாடச் சொல்லும் ரெட்டியார் சுவாமியின் கருத்து ஆழ்ந்து சிந்திக்கற்பாலது.

காமம் அக்கினி போன்றது, அக்னியில் நெய்விட்டு ஆஹுதி செய்யச் செய்ய அது ஜ்வலிப்பது போல் காமமும் பொருளை அனுபவிக்க அனுபவிக்க வளரத்தான் செய்யும்.

அக்னி நல்லது கெட்டது என்ற வித்தியாசமில்லாமல் எதிலும் வாயை வைக்கும். சுத்தமான பட்டுப் புடவையையும் சாம்பலாக்கும். அசுத்தமான பொருளையும் சாம்பலாக்கும்.

காமத்துக்குக் கண்ணில்லை, என்கிறபடி காமமும் தகும், தகாது என்ற வித்தியாசமில்லாமல் எங்கும் சம்பவிக்கும்.

"காமத்துக்கு சமுத்திரம் போல் முடிவில்லை" என்று உபநிடதம் கூறும். ('நைவ ஹி காமஸ்யாந் தோஸ்தி ந சமுத்ரஸ்ஸ')

'பகவானே! உம்முடைய அங்கமே நாங்கள். உமக்கே அடிமை செய்வோம். எங்களுக்குண்டாகும் உலகியல் காமங்களை நீர்தான் மாற்ற வேண்டும், என்ற பொருளில் 'உற்றோமே யாவோம்; உனக்கே நாம் ஆட் செய்வோம், மற்றை நங் காமங்கள் மாற்று' என்று பகவானிடம் பிரார்த்திக்கிறாள், ஆண்டாள் நாச்சியார்.

உலகியல் காமங்களைப் பகவத் காமங்களாக மாற்றி அனுபவித்தே அவற்றைச் சீர்திருத்தம் செய்யும் வழி என்று சாத்திரங்கள் கூறும் தத்துவத்தில் ரெட்டியார் சுவாமிக்குத் தெளிவான நம்பிக்கை உண்டு.

காதல், அன்பு, வேட்கை, அவா – என்பன 'ஆசை' என்ற சொல்லைக் குறிக்கும் சொற்களே. இருப்பினும் சற்று விவேகமுடன் நோக்கினால் பொருள் வேறுபடுவதை அறியலாம்.

கண்டவுடன் முதலில் தோன்றும் ஆசையே **'காதல்'** எனப்படும். அனுபவித்தாலன்றி பொறுக்க முடியாமல் உந்தப்படும் ஆசையே **'அன்பு'** எனப்படும். அனுபவித்த பொருளில் இடையறாமல் மேலும் மேலும் தோன்றிக் கொண்டேயிருக்கும் ஆசை, **'வேட்கை'** எனப்படும். அனுபவித்துக் கொண்டிருக்கும் பொழுது அதனை விட்டுப் பிரிக்க முடியாதபடி, பிரிந்து விடுமோ என்ற பயவுணர்வோடு அதிலேயே மண்டிக் கிடக்கும் ஆசையே, **'அவா'** எனப்படும்.

ஞானி நம்மாழ்வாருக்கு இறைவன் பால் தோன்றிய ஆசை, அவா எனப்படும். அதனால் அவர் மோட்சமடைந்தார். அவர் மோட்சமடையும் பொழுது தன்னைப்பற்றி, 'அவா அற்று வீடு பெற்ற சடகோபன்' என்று தனது பக்தியுணர்வை வெளிப்படுத்துகிறார்.

ரெட்டியார் சுவாமிக்கு கோமதித்தாயின் மீது ஏற்பட்ட ஆசை **'அவா'** எனப்படும்.

ஒருபோதும் திருப்தியடையாத தன்மையிலுள்ள உலகியல் ஆசைகளை ஒழித்தால், அந்நிலையே எப்போதும் மாறாதிருக்கும் இறையின்ப வாழ்வைத் தரும்.

ஒழிக்கும் வழியே இறைவனது புகழ்பாடும் பணியில் ஈடுபடுவது என்பது சுவாமியின் கருத்து.

எட்டு அங்கங்களைக் கொண்டது **மைதுனம்** எனப்படும். அவையாவன : 1) பெண்ணை நினைப்பது, 2) அவள் பெயரை அடிக்கடி சொல்வது, 3) அவளுடன் விளையாடுவது, 4) ஒரு மாதிரியாக அவளைப் பார்ப்பது, 5) மறைமுகமாகப் பேசுவது, 6) அவளை அடைய வேண்டுமென்று நினைப்பது, 7) அடைந்தே தீர வேண்டுமென்று முடிவு செய்வது, 8) செயலை நிறைவேற்றுவது,

இந்த எட்டு அங்கங்களைக் கொண்ட மைதுனம் 'ஓம்' என்ற பிரணவ மந்திர ஜெபத்திலீடுபடும் உள்ளத்தைப் பெண் விசயத்தில் ஏற்படுவதைத் தடுத்து, ஆத்ம விஷயத்தில் ஈடுபடுத்தும், பிரம்மச்சரிய வாழ்வு – அதாவது பிரம்மமாகிய மேலான அறிவைச் சேர்ந்து வாழும் வாழ்வை ஏற்படுத்தும்.

ரெட்டியார் சுவாமிக்கு இந்த மைதுனம், கோமதியம்மையிடம் ஏற்பட்டுவிட்டது. அதனால் பிரம்மச்சரிய வாழ்வை மேற்கொண்டார்.

பிரம்மச்சரியம் கடைப்பிடித்துப் பிறவிப் பயனை அடைய யாவருக்கும் நன்மை பயக்கும். 'ஓம்' என்ற பிரணவ மந்திரோபதேசம் செய்த முருகப் பெருமானையும், எங்கும் காட்சி தரும் விநாயகப் பெருமானையும் பெற்றெடுத்த கோமதித் தாயின் புகழ்பாடிப் பிறரையும் பாடச் சொல்கிறார் ரெட்டியார் சுவாமி.

இந்தச் சுவாமியின் புத்தியாகிற மத்தினாலே கடைந்து எடுக்கப்பட்ட உயர்ந்த வெண்ணெய், **'திலகந்தரிக்கும் சிறு திங்களார்'** என்ற பாட்டு,

கடைந்தெடுக்கப்பட்ட வெண்ணெய் மீண்டும் மோரில் ஒட்டாது.

சேற்றிலே வாழும் பிள்ளைப் பூச்சியின் உடம்பில் சேறு ஒட்டாது.

அதுபோல் ரெட்டியார் சுவாமியின் கோமதி அந்தாதிப் பாடல்களின் ஆழ்ந்த கருத்துக்கள் ஒலிக்கும் அவரது இதயத்தின் குரல் செவியில் பட்டுச் சிந்தனை அலைகளை எழுப்புமேயானால், அந்த உள்ளங்களில் உலகியலின்பங்கள் ஒட்டவே ஒட்டாது. பற்றற்ற நிலையில் வாழ்ந்து ஆன்மீக லட்சியத்தை அடைவார்கள்.

## 5. கரளம் கண் புன்னைத் தலத்து அம்பிகையே!

*தங்க வட்டு ஆகரச் செப்பா? மதுரச் சருக்கரை உள*
*துங்க வட்டா? கரகச் சுவடா? என் சுவர்க்கம் கொண்ட*
*வெம் கவட்டு ஆகரது ஆவல் உறாது என்னை மீட்டு வள்ளை*
*அங்க அள்தா கரளம் கண் புன்னைத் தலத்து அம்பிகையே*

கோமதித் தாயே! கண்டாரைப் பிணிக்க வல்ல தனங்களைப் பெற்றுள்ள வஞ்ச நெஞ்சமுடைய பெண்களின் மையலில் சிக்கித் தவிக்காமலிருக்க ஆட்கொள்வாய் என்னை. காது கொடுத்துக் கேட்டருள்வாய் அடியேனது விண்ணப்பத்தை.

உன்னை வழிபடுவோரின் துன்பங்களைப் பார்வையாலே அழிக்கவல்ல நஞ்சு போன்று கண்களைப் பெற்ற புன்னை மரத்தைத் தலவிருட்சமாகக் கொண்ட சங்கரநயினார் கோவிலில் எழுந்தருளியிருந்து அருள்பாலிக்கும் கோமதித்தாயே! என்று அம்பிகையின் திருக்கண்களின் கடாட்ச நிலை பற்றிப் பெருமைப்படுகிறார், ரெட்டியார் சுவாமி.

**'கரளம் கண் புன்னைத் தலத்து அம்பிகையே'**, – என்பது அவர் வாக்கு.

வித்தையையும், விரதங்களையும் வயிற்றுப் பிழைப்பிற்கு மட்டுமே வழியாக வைத்துக் கொண்டு உடலைப் பேணுபவர்கள் கோமதித் தாயின் அருட் பார்வைப் படாதவர்கள்.

எந்நிலையிலும் பணம் சம்பாதிப்பதே வாழ்வின் குறிக்கோள் என்ற கொள்கையில் யாசகர்களாகத் திரிபவர்கள் கோமதித்தாயின் அருட் பார்வைப் படாதவர்கள்.

புதிதாகக் கன்று போட்ட பசு பாலூட்டத் தவித்துப் பறப்பது போல், பார்ப்போரின் புலனின்பங்களுக்குக் கவர்ச்சியூட்டும் நிலையில், மோகத்தில் மூழ்கும் நிலையில், அங்க அசைவுகளை ஆவலோடு காட்டி நடனமாடும் நங்கையர், கோமதித்தாயின் அருட்பார்வை படாதவர்கள். அறிவிலே தெளிவடைந்தவர்களால் மதிக்கப்படாதவர்கள்.

அவர்களுடைய தனங்களை வட்ட வடிவமாயுள்ள 'செப்பு' என்று கூறவா? இனிமையுள்ள வெல்லத்தை நடுவில் கொண்டிருக்கும் சூதாடு கருவி என்று

கூறவா? யானையின் இரண்டு மத்தகங்கள் என்று கூறவா? என்று பலவாறு புகழ்ந்து பேசவல்ல தனங்களைக் பெற்றுள்ளவர்கள், அந்த அழகுப பதுமைகள், அவர்கள் கொடிய வஞ்சகத் தன்மையுடைய நெஞ்சத்தைப் பெற்றிருக்கும் பெண்கள் என்று கடிந்து கூறுவார், ரெட்டியார் சுவாமி.

*"தங்க வட்டு ஆகரச் செப்பா? மதுரச் சருக்கரை உள*
*துங்க வட்டா? கரகச் சுவடா? என் சுவர்க்கம் கொண்ட*
*வெம் கவட்டு ஆகரது...*

என்பது அவர் வாக்கு.

*(துங்க – மேலான, கவட்டு – வஞ்ச நெஞ்சம் பெற்றவர்கள்)*

இசை, நடனம் – இந்த இரண்டு தெய்வீகக் கலைகளும் இன்று உள்ளன – சீரழிந்த நிலையில். மனிதன் தனது சிற்றின்பத்திற்காகவும், கேளிக்கைகளுக்காகவும் அவைகளைப் பயன்படுத்துகிறான் – தாழ்ந்த நிலையில். உடல் நிலையைச் சார்ந்து புலனுணர்வுகளை அமைத்து (Body Rhythm) அனுபவிக்கிறான் – கிளர்ச்சியூட்டும் நிலையில்.

அவற்றை மீண்டும் பழைய தூய நிலைக்கு உயர்த்தி, மனதில் சாந்த நிலையை உருவாக்கும் நிலையில் (Mind Rhythm) அமைத்து அனுபவிப்பது ஒவ்வொரு பக்தனின் கடமையாகும்.

குழலூதும் கண்ணனும் வீணையைக் கையிலேந்திய கலைமகளும் நமக்கு அறிவுறுத்துவது – பாட்டு தெய்வீகமானது என்பதை.

நடராசப் பெருமானின் காலைத் தூக்கி நின்று ஆடும் கோலம் நமக்கு உணர்த்துவது – சிவபெருமான் நடனத்திற்குப் பிறப்பிடம் என்பதை.

நமது உற்சாகத்தை, உத்வேகத்தை, தன்னம்பிக்கையை நம்மிடமிருந்து பறிக்கும் சக்திகளே சோம்பல், சுயப்பச்சாதாபம் முதலியன.

இவற்றை அழிக்க வேண்டும் – முதலில். உற்சாகத்தை நம்மிடமிருந்து பறிக்கும் சக்தி கிடக்கிறது – நடராசரின் காலடியில்.

நடனமாடும் நடராசரின் கையிலுள்ள தீ ஜ்வாலை நமது புரிந்து கொள்ளும் அறிவைக் குறிக்கும். இன்னொரு கையிலிருக்கும் உடுக்கை ஞானத்தைக் குறிக்கும். 'பயமின்றி வாழ்' என்பதைக் குறிப்பது – மூன்றாவது கையின் மூலம் நடராசர் காட்டும் அபயமுத்திரை.

நம்மைத் தாழ்மைப்படுத்தும் அரக்கன் (தாழ்வு மனப்பான்மை) என்ற சக்தியை அழித்தால் துள்ளித் துள்ளி நடனம் ஆடும் அளவுக்கு நமக்கு உற்சாகம் பிறக்கும். உற்சாகம் பிறந்தால் மகிழ்ச்சி பிறக்கும்.

நடராசர் மாதிரி தம்மைத் தாமே புரிந்து கொள்ள வேண்டும். முழு ஞானத்தோடு நம்மைத் தாழ்மைப்படுத்தும் சக்திகளை வீழ்த்த வேண்டும். பின் அதன் மேல் நின்று நடனமாடினால் கண்களுக்குத் தெரியமாட்டார் - நடனமாடுபவர். கண்களுக்குத் தெரிவது நடனம் மட்டுமே.

அந்த நடனத்தின் மூலமே மனத் தெளிவு பெற்ற இரசிகர்கள் உற்பத்தியாவார்கள்.

நடனமாடுபவர் கண்களுக்குத் தெரியும் பொழுதே, 'தங்கவட்டு ஆகரச் செப்பா? மதுரச் சருக்கரை உள துங்க வட்டா? கரகச் சுவடா? போன்ற கேள்விகள் புலனுணர்வுகளின் கிளர்ச்சிகளால், மோகத்தில் மூழ்கிய நிலையில் உற்பத்தியாகின்றன.

சரி, அப்படியெனில் எப்படி நடனம் ஆடுவது? சந்தோஷத்திற்காக நடனம் ஆடினால் மகிழ்ச்சி கிடைக்காது. ஆட ஆரம்பிக்கும் பொழுதே சந்தோஷத்தோடு நடனமாடவேண்டும்.

அது போல் பயன் கருதிச் செயலீடுபட்டால் நமக்கு மகிழ்ச்சி ஏற்படாது. செயலில் ஈடுபடும் பொழுதே மகிழ்ச்சியோடு ஈடுபட்டுப் பயனைக் கருதாமல் இறைவனுக்கு அர்ப்பணிப்போடு செய்ய வேண்டும்.

Don't Duty for happiness! Duty out of happiness!

வஞ்சகத் தன்மையோடு நெஞ்சமுடைய பெண்களின் மையலில் சிக்கித் தவிக்காமல் மிகவும் தாழ்ந்த அடியவனாகிய என்னைப் பிறவியாகிய கடலிலிருந்து கரையேற்றுவாயாக என்ற பொருளில்

*''வெம்கவட்டு ஆகரது ஆவல் உறாது என்னை மீட்டு வள்ளை*
*அங்க அள்தாகரளம் கண் புன்னைத் தலத்து அம்பிகையே''*

என்று பிரார்த்திக்கிறார், ரெட்டியார் சுவாமி.

*(அங்க அள் தா – உறுப்பாகிய உன் திருச் செவியினைத் தருவாயாக)*

'வள்ளைக் கொடி போன்ற உறுப்பாகிய உன் திருச் செவியினை (யான் சொல்லும் விண்ணப்பத்தைக் கேட்கத் திருவுளங் கொண்டு) தருவாயாக; என்கிறார்.

கோமதித் தாயின் கேசாதி பாதமாக நீலத் தாமரை வதனம் சிரித்த சிவப்பு வாய், மலர்ந்த மல்லிப் பல் வரிசை என்ற முறையில் அவளது சௌந்தர்ய ரூப லாவண்யத்தை அங்க அங்கமாக ரசித்து மாணிக்கச் சுடர்களாக மின்னும் நகவரிசையால் ஒளிரும் இணையடி மலர்களில் தம் உள்ளத்தை ஈடுபடுத்தினார், ரெட்டியார் சுவாமி.

கோமதித்தாய் தமது திருச்செவி சாய்த்து ரெட்டியார் சுவாமியின் விண்ணபத்தை ஏற்றுக் கொண்டாள். அதன் பலனாகத் தாம் வாழும் காலத்திலேயே உடற்பற்றை நீக்கிக் கொண்டார், ஜீவன் முக்தரானார்.

அலையெறியாக் கடலின் காம்பீரயமும் கடக்க முடியாத்தன்மையும், கலக்க இயலாத் தன்மையுமே முனிவர்களது இயல்பு என்ற அருளுரையைக் கடல் நமக்குப் புகட்டுகிறது.

ரெட்டியார் சுவாமிகளின் திருவுளத்தில் புகுந்தது – அந்தக் கம்பீரமான கடலின் இயல்பு.

கடல் பெரிதாவது இல்லை – நதிகள் வெள்ளமாக வந்து விழுவதால்.

கடல் சிறுக்கவும் இல்லை – நதிகள் வற்றும் பொழுதில்.

கோமதித்தாயின் பரம பக்தனாக உள்ள நம் ரெட்டியார் சுவாமியின் ஆசைகள் பூர்த்தியாவதில் பூரிக்கவில்லை. ஆசாபங்கம் ஏற்படும் பொழுது சுணங்காமலும் சமநிலையிலிருந்தார்.

மண்ணுயிர் எல்லாம்தொழும் தன்னுயிர் தான் அறப் பெற்றவரான நம் ரெட்டியார் சுவாமிக்கு எமபயம் இல்லை. தன்னொத்த அடியார்களுக்கும் இல்லை என்கிறார்.

பிறவியும் மரணமும் கெட்டு மேகம் போன்று உறுமிக் கொண்டு சினந்து யாவருக்கும் இறுதியைச் சேர்ப்பவன் எமன். அவன் பாசக் கயிற்றோடு வந்த காலத்திலும் அவன் தலையில் குட்டி அடியார்கள் அவனை ஓட்டி விரட்டி விடுவார்கள் என்று கம்பீரமாகப் பாடுகிறார், ரெட்டியார் சுவாமி.

*''பிறப்போடு இறப்பும் கெட மஞ்சு அனக்கோ*
*வித்து அந்தத் தும்பினன் வந்தாலும் குட்டி வெருட்டுவரே''*

என்பது அவர் வாக்கு.

*(மஞ்சு அன கோவிந்து – மேகம் போன்று உறுமிக் கொண்டு சினந்து: தும்பினன் – பாசக் கயிற்றையுடைய எமன்)*

மரண பயம் பற்றித் தாகூர், ''நீ இந்தப் பூமியில் வந்து பிறப்பதற்கு முன்னதாகவே உனக்காக உன் தாயின் இரண்டு தனங்களிலும் பாலைச் சுரக்க வைத்தவன் இறைவன். நீ இறந்த பின்னும் உனக்காக இன்னொரு உலகத்தையே கூட அவன் படைத்து வைத்திருக்கக் கூடும். அதனால் நம்பிக்கையோடு இரு'' என்கிறார்.

பக்தி மார்க்கத்தில், சரணாகதி நெறியில் தோய்ந்த மனம் அந்திம காலத்தில் உடல் உபாதைகளால் பாதிக்கப்படாது என்பதையே, எம தண்டனைக்குப் பயப்படமாட்டாது என்று சுவாமியால் குறிப்புணர்த்தப் படுகிறது.

## 6. மருள் தப்பு அணி நஞ்சு உழலார் மண்

*தெருட்டப் பணி நஞ்சு விண்ணோர் அலற விழுங்கிக் கண்டாம்*
*இருட்டப் பணி நம் சுத்தன் கணப் போதும் இருப்பது உண்டோ?*
*மருள் தப்பு நஞ்சு உழலார் மன் புன்னை மனோன்மணி மா*
*தெருட்டப் பண் இனம் சுவை வாய் மருந்து உள் செலாவிடினே.*

எல்லாம் வல்ல சிவபெருமான் அருந்திய நஞ்சின் கொடுமையைக் கெடுத்தது – கோமதியம்மையின் வாயமுதம். எத்தகைய துன்பங்களையும் மனோ வேதனைகளையும் அடைய மாட்டார்கள் – அவள் அருளை நாடிப் பெற்றவர்கள்.

கோமதித்தாயின் அருளால் அவளது அடியார்கள் மயக்கமாகிய குற்றத்தில் படிந்து மனம் மிகவும் நொந்து துன்புற மாட்டார்கள் என்பது உறுதி என்கிறார், ரெட்டியார் சுவாமி.

அவளது அருட் கடாட்சத்தின் விசேஷம் என்ன? சிவபெருமானின் உயிரைக் காப்பாற்றியது, அவள் கடாட்சமே.

எப்படி?

எல்லோரும் பயப்படும்படியாக ஆதிசேடனாகிய பாம்பு பாற்கடல் கடையும்பொழுது விஷத்தைக் கக்கியது. அதனைப் பார்த்துத் தேவர்கள் எல்லோரும் அதன் வெப்பத்தைப் பொறுக்காமல் பயந்து ஓலமிட்டுக் கொண்டு ஓடினார்கள். அந்நிலையிலும் பரமசிவன் அவ்விஷத்தை உடகொண்டு தன் கழுத்தைக் கருமையாகும்படிச் செய்து கொண்டார்.

*''தெருட்டப் பணி நஞ்சு விண்ணோர் அலற*
*விழுங்கிக் கண்டாம் இருட்டப் பணி...*

உடனே எல்லாச் செல்வங்களையும் தரவல்ல அருகிலிருந்த கோமதித்தாய் யாவரும் தெளியும்படி இராகக் கூட்டங்களையெல்லாம் பாடி இரசிக்கும் தன் வாயிலிருந்து ஊதிய அமுதமான சொற்கள் மூலம் அப்பெருமான் உண்ட விஷத்தை நீக்கினாள், என்கிறார் ரெட்டியார் சுவாமி.

''தெருட்டப் பண்ணு இனம் சுவை வாய் மருந்து உள் செல்ல...'' - என்பது அவர் வாக்கு.

மேலும் அவர் கோமதித்தாயின் அமுதமான சொற்களால் விஷம் நீக்காவிடில் உயிர்களெல்லாம் தொழத்தக்க நம் சிவபெருமான் சீவித்து இருக்க முடியுமா? என்று ஓர் வினாவும் எழுப்புகிறார்.

**'நம் சுத்தன் இருப்பதுண்டோ?'** என்பதே அந்த வினா.

தீ மிதிக்கும் பக்தர்கள் யாரும் அதில் முறையாகப் பயிற்சி பெற்ற விளையாட்டு வீரர்கள் அல்ல. என்றாலும் தீ மிதிக்க வேண்டும் என்ற வைராக்கியம் மனதில் வந்தவுடன் அவர்களுக்குத் தேர்ந்த ஒரு வீரனின் உற்சாகமும் வேகமும் வந்து விடுகிறதல்லவா? எங்கிருந்து வந்தது?

அவர்களது மனத்திலிருந்துதான் வந்தது.

அது போல் குடும்பத்தில் கணவனும் மனைவியும் ஒருத்தரை ஒருத்தர் தங்கள் வெற்றிக்கு எப்படி எப்படிப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்? பாதகமான சூழ்நிலைகளைச் சாதகமாக்கிக் கொள்ள ஒருவரை ஒருவர் எப்படி எப்படி வழி நடத்திச் செல்ல வேண்டும் என்ற வைராக்கிய மனப்பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது அவர்கள் மனங்களில் உற்சாகமும் விவேகமும் வந்து விடும். வாழ்க்கை வளம் பெற்று விடும்.

சிவபெருமானுக்கு ஏற்பட்ட பாதகமான சூழ்நிலையில் கோமதித்தாய் உணர்ச்சி வசப்படாமல் தன் திறமையைப் பயன்படுத்தினாள். தன் இனிமையான சொற்களால் கணவரது துன்பத்தை மாற்றினாள். பத்தினிப் பெண்களுக்குத் தன் நடத்தையால் வாழும் முறையைக் காட்டினாள்.

தனது முக்கியத்துவத்தைக் குறைத்துக் கொள்ளும் உள்ளத்தில் தான் **'சலிப்பு'** ஏற்படும். தன்னைவிட அதிக முக்கியத்துவம் பெறுகிறவர்களைப்

பார்த்துப் பொறாமையை வரவழைத்துக் கொள்ளும். அந்தப் பொறாமையே காலப் போக்கில் புலம்பித் தள்ளும் குணத்தையும் கொடுத்து விடும்.

**'சலிப்பு'** என்ற புதை குழியிலிருந்து மீட்கப்பட்ட உள்ளம் இல்லத்தில், அலுவலகத்தில், சமுதாயத்தில் தனது முக்கியத்துவத்தை அதிகமாக்கிக் கொள்ளும். எந்நிலையிலும் **தன்னால் பிறரது துன்பத்தைப் போக்க முடியும்** என்ற முத்திரையைப் புதுப்பித்துக் கொள்ளும். நம்பிக்கையுடன் செயல்பட்டு வெற்றி அடையும்.

அப்படிக் கோமதியம்மையாரின் உள்ளம் செயல்பட்டது. தமது கணவர் சிவபெருமானின் ஆபத்தைப் போக்கி உயிர் வாழச் செய்தது என்று கூறும் ரெட்டியார் சுவாமியின் அருள் வாக்கில் தம்பதிகள் பாதகமான சூழ்நிலை ஏற்பட்ட காலத்தும் ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழும் மதிநலம் பெற்றிருக்க வேண்டும் என்பது குறிப்புணர்த்தப்படுகிறது.

அவளையே நாளும் வணங்கித் தொழுவார்க்கு அவளையேயொத்த அருள் செய்வாள் என்பதில் ஐயமுண்டோ? இல்லை. அவளது அடியார்கள் மயக்கமாகிய குற்றத்தில் படிந்து வருந்த மாட்டார்கள் என்ற பொருளில், **'மருள்தப்பு அணி நஞ்சு உழலார் மன்'** என்ற சுவாமியின் வாக்கு வாழ்க்கையில் ஏற்புடைத்தாகும்.

உண்மையான பொருள் என்பது, கோமதித் தாயின் திருவடிகளே. அவ்வம்மையாரிடத்து ஆராத பக்திபூண்டு ஒழுகும் அடியார்களே, உண்மையான உறவினர்களாவர்.

இதனை அனுபவங்களால் உணர்ந்து வாழாதவர்கள் உலகியல் இன்பங்களை அளிக்கும் அறிவுடைய, அறிவற்ற பொருள்களால் காலப் போக்கில் வருந்துவார்கள் என்று ரெட்டியார் சுவாமி எச்சரிக்கிறார்.

உலகியலின்பங்களை மன்மத சேனை என்ற பொருளில், **'அங்கசத்தளம்'** என்று கூறும் அழகு சுவைத்து இன்புறத் தக்கதாகும்.

நாம் செல்லும் வண்டி பிரேக், கட்டுப்பாடு இருந்தால்தான் சேர வேண்டிய இடம் போய்ச் சேர முடியும். இல்லாவிட்டால் முடியாது.

அதுபோல் நம் மனம் கட்டுப்பாடில்லாமல், அறிவுக்கு உட்பட்டுச் செயல்படாவிட்டால் செய்யும் செயலில் பங்கம் ஏற்படுத்திவிடும்.

நண்பன் யார்? எதிரி யார்? என்ற வினாக்களுக்குச் சரியான விடைகள் இதுதான்.

தன் மனத்தை இலயித்தவனே நண்பன். இலயிக்காதவனே எதிரி.

தன் மனத்தை இலயித்துக் கொண்டு, புலன்கள் கட்டுப்பாட்டோடு தவத்தில் அமர்ந்த சிவபெருமானது தவத்தையும் கலைத்துவிட்டான், மன்மதன்.

கோமதித்தாயின் திருவருளால் தான் செய்ய முடியாத செயலையும் செய்து விட்டான் மன்மதன் என்கிறார், ரெட்டியார் சுவாமி. ஒரு காலத்தில் இமயமலையில் சிவபெருமான் செய்த தவத்தையும் கலையும் படிச் செய்தான் என்கிறார்.

*"...... விமலை அபி*

*மானம் கிளைத் துரகன் பெற்று யோகத்தை மாற்றினனே"*

என்பது அவர் வாக்கு.

*(கிளைத் துரகன் – கிளியை வாகனமாகக் கொண்ட மன்மதன்)*

## 7. நீற்று ஐக் கரு அத்தம் தவாது உறைந்தாய்

*மாற்றைக் கரத்து அந்த மாறன் கொண்டு ஒச்சவும் மா மதியக்*
*கீற்றைக் கரத்து அந்தப் பூண்விட்டுக் கே மணமே கவறும்*
*நீற்று ஐக் கரு அத்தம் தவாது உறைந்தாய் புன்னை நீள் மண நின்*
*மேல் தைக்க ரத்தம் ததும்பும் என்று ஓர்ந்தும் விலங்கிலையே.*

*(ஓச்சவும் – ஓங்கி அடிக்கவும்; கேமணமே கவறும் – கோவணத்தைத் திருடும் (அமர் நீதி நாயனார் வரலாறு காண்க) அந்தம் – இடப்பாகம்; தவாது – நீங்காது)*

கோமதித் தாயைத் திரிபுண்டரம் அணிந்த தலைவனான சிவபெருமானின் மேன்மை பொருந்திய இடப்பாகத்தினின்றும் நீங்காது தங்கியிருந்து அருள்பாலித்துக் கொண்டுள்ளாய் என்கிறார், சுவாமி.

**'நீற்று ஐக்கரு அத்தம் தவாது உறைந்தாய்'** என்பது அவர் வாக்கு.

பிறைச் சந்திரன், பாம்பு முதலியவற்றை மறைத்துக் கொண்டு கோவணக் கள்வனாயவனைப் பிரம்பால் பாண்டியன் அடித்த பொழுதும் உன் மேல் அந்த

அடிபட்டு இரத்தம் பீறிடும் என்று நினைத்து விலகாமல் சிவபெருமானின் இடப்பக்கத்திலேயே அமர்ந்திருந்த கோமதித்தாயின் பெருமையை என்னென்று கூறுவது? என்று வியந்து கூறுகிறார், ரெட்டியார் சுவாமி.

இதன் மூலம் சக்தியும் சிவமும் பிரிக்க முடியாதது என்ற உண்மையைக் கொண்டு இல்லற தர்மத்தைக் குறிப்புணர்த்துகிறார்.

நதியின் மேல் மட்டம் சலனமில்லாமல் காணப்படலாம். அதனுடைய பல வகையான ஆழ் நீரோட்டங்கள் ஒன்றோடொன்று மோதிக் கொண்டு தான் இருக்கும்.

அதுபோல் தம்பதிகளின் வாழ்க்கைக் காண்போருக்கு எந்தவிதமான சலனமில்லாமல் ஒற்றுமையாக வாழ்வது போல் காணப்படலாம். ஆனால் அவர்களுடைய உள்ளுணர்வுகள் ஒன்றொடொன்று மோதிக் கொண்டு, **'உணர்வு என்னும் பெரும் பதம்'** அடைய விடாமல் அன்புணர்வைச் சிதைத்துக் கொண்டிருக்கும். ஒரு கால கட்டத்தில் பாதகமான சூழ்நிலைகள் நெருங்கும் பொழுது பிரிந்து விடுவார்கள்.

இச்சைக்குக் கட்டுப்படாதது உள்மனம். தன்னிலையில் அணிச்சைச் செயலாகச் செயல்படும் உள்மனம்.

அப்படித் தானே இயங்கும் உள் மனதை இறை வழிபாட்டில் நிலை நிறுத்தும் பொழுதே அறவாழ்வின் மேன்மையை உணர முடியும்.

எந்நிலையிலும் தம்பதிகள் பிரிக்க முடியாத சக்தியும் சிவமுமாக வாழ முடியும்.

இல்லறத்தில் மகிழ்ச்சி எப்படி ஒரு சுவையோ அதேபோல் துயரமும் ஒரு சுவையே என்பதை அனுபவங்கள் மூலம், சிந்தனை மூலம் உணர வேண்டும். கசப்பான பாகற்காயை விரும்பி ரசித்துச் சாப்பிட வில்லையா?

மனதிற்குப் பிடித்துப் பழகிவிட்டால், இனிப்பு என்பது எப்படி ஒரு சுவையோ, அதேபோல் கசப்பும் இரசிக்கக் கூடிய ஒரு சுவைதான் என்பதை உணரலாம்.

அப்பொழுது மனம் தானாக அடைவது – அமைதி. உண்மைகளைப் புரிந்து நீக்கிக் கொள்வது – பேத உணர்வுகளை. அழகாக அமைவது – தம்பதிகளின் இல்லறம்.

அற்புதமானதாக, எந்நிலையிலும் ஒரு மலரைப் போல வாழ்வு மௌனமாக, மென்மையாக விரியும்.

மென்மையாக விரிவடைய வேண்டும் என்று குறிப்புணர்த்தும் ரெட்டியார் சுவாமியின் பாடல் வரிகள்,

*''மாற்றைக் கரந்து அந்த மாறன் கொண்டு ஒச்சவும்...*
*நீற்று ஐக் கரு அத்தம் தவாது உறைந்தாய்...''*

என்பதாம்.

திருமால் திருமகளைத் தன் மார்பில் தூக்கி வைத்துக் கொண்டு உள்ளான். எதற்காக?

- தன் இதயத்தில் சுரக்கும் குளிர்ந்த கருணையின் உருவமே அவள், என்பதைக் காட்டுவதற்காக.

அதனால் அவன் ஸ்ரீநிவாசன், ஸ்ரீநிகேதன் என்ற திருநாமங்களும் பெறுகிறான்.

திருமகளும் அவளது இதயத்திலிருந்து கொண்டு உலகங்களைத் தன் கருணா கடாட்சத்தால் பரிபாலித்து வருகிறாள்.

அந்தத் திருமகளைப் போல் மனைவி தன் அறிவாலும், மங்களகரமான குணங்களாலும் தன் கணவரது இதயாசனத்தில் அமர வேண்டும்.

தான் புகுந்த வீட்டிலுள்ளாரிடம் எந்நிலையிலும் தன் கருணை ஊற்று வற்றி விடாமல் கவனித்துக் கொண்டு அவர்களைப் பரிபாலனம் செய்ய வேண்டும்.

கருணையின் உருவமாகத் தான் திருமகளைத் திருமார்பில் தூக்கி வைத்துள்ளான் திருமால். மனதை மோகிக்கச் செய்யும் ஈடும் இணையும் அற்ற அழகுப் பதுமையாக இருக்கிறாள் என்பதற்காக அல்ல. சிங்கார ரூபத்தில் காட்சியளிக்கும் மோகினியாக இருக்கிறாள் என்பதற்காக அல்ல. காமக்கிழத்தி என்பதற்காக வல்ல. திருமாலைப் பின்பற்றிக் கணவனும் தன் இதயத்தில் தன் மனைவியைக் கருணையின் உருவமாகத் தான் தூக்கி வைத்திருக்க வேண்டும்.

மாறாக மனத்தை மோகிக்கச் செய்யும் மோகினியாகப் பாவித்துத் தன் இதயத்தில் தூக்கி வைத்திருந்தால் அந்த மனைவி நிலோத்பல காந்தி

கொண்டவளாக, மேலும் அந்தக் காந்தி எடுபடத் தலையில் மல்லிகைப் பூச்சரமும் சூட்டியவளாகக் காட்சி அளிப்பாள்.

இடையில் வெண் பட்டும் உடுத்து வெட்கப் புன்னகையும், புருவ நெளிப்பும் காதல் கண் வீச்சுமாகக் காட்சியளிப்பாள்.

ஓநாய்ப் புதுப்புது இரத்தங்களைச் சுவைப்பதற்காக ஆசைப்படும். அதுபோல் கணவனின் ஊதியத்தைப் புதுப்புது ஆடை அலங்காரங்களுக்கும் அணிகலன்களுக்கும் செலவழிப்பாள்.

'நான் என்ன செய்தாலும் ஒப்புவீர்களானால், இந்த அமிர்தத்தைப் பரிமாறுவேன்' என்று அரக்கர்களிடம் நிபந்தனையிட்ட மோகினியைப் போல், தன் கணவரிடத்திலும் குடும்பத்தாரிடத்திலும் நிபந்தனைப் பட்டியல் போடுவாள். காலப் போக்கில் கணவரிடமிருந்தும் குடும்பத்தாரிடத்தும் பிரிந்தே சென்று விடுவாள்.

எனவே க்ணவன் தன் குடும்பத்தில் யாரிடமும் சிறைக் கைதியாக ஆகாமல் தள்ளி நின்று சிந்தனையோடு செயல்பட வேண்டும் என்பதற்காகவே திருமால் தன் மனைவியாகிய இலட்சுமியை வலப்பக்கத்திலும், சிவபெருமான் கோமதியம்மையாரை இடப்பக்கத்திலும் கருணை ஊற்றுக்களாக அவர்களை வைத்துக் கொண்டுள்ளார்கள்.

அந்தக் கருணை ஊற்றுக்கள் குடும்பங்களிலும் ஓடிப் பெருகி உயர்வான நெஞ்சங்களை உருவாக்குவதற்காகவே ஆண்டுதோறும் திருக்கோயில்களில் தெய்வங்களுக்குக் கல்யாண உற்சவங்கள் நடத்துகிறார்கள்.

பாண்டியனிடம் அடிபட்ட சிவபெருமானது உடலில் இரத்தம் பீறிடும் நிலையிலும் கருணையின் ஊற்றான கோமதித்தாய் அவரைப் பிரிந்து செல்லவில்லை என்று கூறும் ரெட்டியார் சுவாமியின் வாக்கானது, பத்தினிப் பெண்களுக்குச் சிறந்த அணிகலனாகும்.

அந்த மேலான அணிகலன் கிடைக்கும் நகை மாளிகை – கோமதித்தாயின் அடியார்கள் கூட்டமே.

அவள் அடியார்கள் கூட்டத்தில் தங்கி மேலான இன்பக் கடலில் திளைத்து இன்புற்றிருக்கும் நிலையை அவளருளால் பெறும் பொழுது, அந்த மேலான அணிகலன் கிடைக்கும்.

அடியார்க் கடியார்கள் கூடியிருந்து அனுபவிக்கும் இன்பத்தைக் 'சுக ஆனந்த சாகரம்' என்று கூறும் சுவாமியின் வாக்கு சுவைத்து இனபுறத்தக்கதாகும்.

## 8. வேகக்கவிக் குறும்பு சிந்தையேன்

*பாகக் கவிக்கு உறும் பேறு எனநின் புகழ் பாடுகிலா*
*வேகக் கவிக் குறும்புச் சிந்தையேற்கும் விரை நறவுஊன்*
*நா கக்க விக்குறும் வண்டு ஆர்க்கும் புன்னனை விமலை அமுதே!*
*க கவிக்கு உறுகண் கடைக்கு ஈவை நின் சேவையையே!*

*(பாகக் கவி – மதுரமான தோத்திரப் பாடல்கள்; வேக கவிக்குறும்பு – அவசரப் புத்தியுடன் குரங்குச் சேட்டைகள் பல பொருந்திய; கா – காப்பாற்றுவாயாக; 'கா' என்பது 'க' எனக் குறுக்கல் விகாரம் ஆயிற்று)*

வண்டுகள் சப்திக்கின்ற புன்னை மரத்தைத் தல விருட்சமாகவுடைய சங்கர நயினார் கோயிலில் எழுந்தருளியுள்ள தாயே! உன் புகழை நன்கு பாடும் ஆற்றலற்ற கொடிய மனமுடைய அற்ப குணங் கொண்டவன் நான். என்னை வந்து வாட்டும் துன்பங்களை நீக்கி உன் தரிசனம் தந்து அடியேனைக் காப்பாற்று என்று பிரார்த்திக்கிறார்.

எதிலும் அவசரப் புத்தியுள்ள குரங்குச் சேட்டைகள் பல பொருந்திய மனத்தையுடையவன் என்று நம் சுவாமி 'நின்றவா நில்லா நெஞ்சினை', யுடையதைத் தான் உணர்ந்த நிலையில், **'வேகக்கவிக் குறும்பு சிந்தையேன்'** என்று கூறுகிறார்.

உணவை அருந்தினால் அது மூன்று காரியங்களைச் செய்கிறது. நாக்கு ருசியைத் திருப்திப்படுத்துவது; வயிற்றுப் பசியைப் போக்குவது; உடலைப் பேணி வளர்ப்பது முதலியன.

அதுபோல் கோமதித்தாயிடம் அடைக்கலமடைந்து தன் ஞானத்தால் அவளது பாதாதி கேச அங்கங்களின் அழகை அருந்திய ரெட்டியார் சுவாமிக்கு மூன்று காரியங்கள் சித்திக்க ஆரம்பித்து விட்டன. அவை பக்தி, விரக்தி, முக்தி முதலியன.

அந்நிலையில் தம் மனத்தையுணர்ந்து, தன் உண்மையான சொரூப நிலையை அறிந்து கூறுகிறார்.

கோமதியம்மையாரைத் தம்முடைய இதய வாசியாக உணரும் பேரனுபவம் அவள் அருளாளல் பெற்ற நிலையில், தம் மனத்தைப் பற்றி கூறுகிறார்.

ஒரு மரம் சிறந்த மரமா? இல்லையா? என்பதை யாரும் தீர்மானிப்பதில்லை – அந்த மரத்தைக் கேட்டு. தீர்மானிப்பார்கள் – அது தரும் பழங்களை வைத்து.

நம்மைக் கேட்டு இந்த உலகம் தெரிந்து கொள்ளாது – நாம் சாதிக்கப் பிறந்தோமா? இல்லையா என்பதை. தெரிந்து கொள்ளும் நம் சாதனைகளைக் கண்டு.

இந்த உலகம் நம்மை எடை போடுவது – நாம் சாதித்த சாதனைகளை வைத்தே.

செய்வது எதுவாக இருந்தாலும் பொருளை, செயலை உணர்வுகளை அனுபவித்து முழு ஈடுபாட்டேடு செய்யும் சாதனையில் வெற்றி காண வேண்டும். வெற்றி காண்பதைப் பொறுத்தே உலகம் நம்மை எடை போடும்.

எந்தச் செயலைச் செய்கிறோமோ, அந்தச் செயலில் நமது ஐம்பொறிகளையும் (மெய், வாய், கண், மூக்கு, செவி) ஐம்புலன்களையும் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்) ஈடுபடுத்தி, அந்தச் செயலையே தியாகமாக மாற்றி, இறைவனுக்கு அர்ப்பணிப்புச் செய்து, அந்தச் செயலுக்குரிய காலத்திற்குள் சரியாகச் செய்து முடிக்க வேண்டும். அதை வைத்தே உலகம் நம்மை எடை போடும். (Every duty is holly and devotion to duty is the highest form of worship of God)

ஒரு பிரச்சினையைத் தீர்க்க வேண்டுமானால் முதலில் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும், அந்தப் பிரச்சினையை.

நன்கு புரிந்து கொள்ள வேண்டுமென்றால், மனம் பதட்டம் இல்லாமல் சமன் நிலையில் இருக்க வேண்டும்.

"நீயும் நானும் இந்நேர் நிற்கில் மற்றோர் நோயும் சார் கொடான், நெஞ்சமே சொன்னேன்" – என்று தம் மனத்திடம் கூறுகிறார் ஞானி நம்மாழ்வார்.

அவர் கூறுவது, தன் மனம் அறிவோடு ஒத்துழைக்காத நேரத்தில். அந்நேரத்தில் தான் உருவாகப்படுகின்றன – பிரச்சினைகள். மனம் அறிவோடு

ஒத்துழைத்துச் செயல்பட்டால் பிரச்சினைகள் உருவாகாது. அதனைத் தெளிவோடு உணர்ந்து கூறுகிறார்.

எண்ணங்களின் இடையறா ஓட்டமே நமது மனம். அதன் பின்னுள்ள ஆற்றலைக் காண முடியும் – அந்த ஓட்டம் நின்றால்.

மனம் ஓடும் பரப்பைக் குறைக்க வேண்டும் - குரு அருளால் மேற்கொள்ளும் பயிற்சியால்.

அதற்கு ஜபம், தியானம், நாம சங்கீர்த்தனம் எல்லாம் ஒழுங்காகத் தொடர்ந்து செய்வது நல்லது.

அந்த நல் வழியில் செல்லும் பொழுது மனம் மெதுவாக, ஈஸ்வரனின் உருவமான இன்ப உருவமாக மாறிவிடும்

மாறிவிட்ட ரெட்டியார் சுவாமியின் உள்ளம், கோமதித்தாயிடம், துன்பங்களை நீக்கி மிகவும் கீழ்மையுள்ளவனாகிய எனக்கும் நின் மேலான காட்சியைத் தந்து அருள்பாலிப்பாயாக என்று பிரார்த்தனை செய்கிறது.

**'கவிக்கு உறு கண் கடைக்கு நின் சேவையை ஈவை'** என்பது அவர் வாக்கு.

அந்த வாக்கின் மூலம் இறைவனுக்கு அடிமைப்பட்ட நிலையில் ஞான ஆனந்தமுடன் தொண்டு நெறியில் ஈடுபடுவதே மானுடப் பிறவியின் குறிக்கோள் என்பது தெளிவாகிறது.

இந்தக் குறிக்கோள் உணராதவர்கள் அடையும் பலன், இறைவனுடைய ஆணையை மீறி நடந்து, பகவத் விஷயத்தில் பொறாமையும் த்வேஷமும் கொண்டிருப்பார்கள். அவர்களும் அவர்களுடைய வம்சத்தைச் சார்ந்தவர்களும் நரகத்தில் வீழ்த்தப்படுவார்கள் ('மஜ்ஜந்தி பிதரஸ் தஸ்ய நரகே சாச்வதீஹ ஸ்மா:') என்று மகாபாரதம் எச்சரிக்கை விடுக்கிறது.

'தீவிரவாதம்', என்ற கொள்கையில் மக்களையும் அவர்களது உடைமைகளையும் அழிப்பதற்கு, அறிவியல் முன்னேற்றத்தை உபயோகிக்கிறார்கள். அவர்கள் 'மதம்' என்ற போர்வைக்குள் இருந்துகொண்டே தங்களது கொடூரமான செயல்களையும் நியாயப்படுத்துகிறார்கள்.

அந்த மதங்கள் பொய்யொழுக்கம் நிறைந்தவைகள்.

அந்த மதங்களை உணர்ந்த ரெட்டியார் சுவாமி, 'கோமதித்தாயிடம் குற்றம் பொருந்திய பாடல்களைப் பாடும் மிகவும் பயந்தவனாகிய எனக்கு உமது திருவடிகளைத் தந்து அருளினாய். பொய் யொழுக்கம் நிறைந்த நமக்கும் அப்பாற்பட்ட புறமதக் கூட்டங்களின் கொள்கைகளைக் கொள்ளாதே என்று அறிவு புகட்டி மிகவும் சுலபமாக எம்மை ஆட்கொண்ட தன்மையை என்னவென்று கூறுவேன் என்கிறார்.

*''பாவைச் சமய அச்சனுக்கு எளிதால் பதம் தந்து பொய்அ*
*கோவைச் சமயங்கள் கொள்ளேல் என்று ஆண்டன...''*

– என்பது அவர் வாக்கு.

பொய்யொழுக்கமில்லாத வாழ்க்கை நெறிகளைக் கொண்ட இந்து மதத்தில் ஈடுபாடு கொள்வதற்கு இறைவனது அருள் இன்றியமையாதது.

## 9. ஊழ்வன் கருந்தாதை அராவலை என்றால் அருளாததால் உய்யமே

*பேதையர் ஆவலை மாற்றோம் அவர்தம் பெரும் நிதம்ப*
*வாதை அரா அலைக்கத் தளர்ந்தேம் கன்றின் வாளை முட்ட*
*ஒதை அரா அலைப்பால் சாய்க்கும் புன்னை மின் ஊழ்வன் கருந்*
*தாதை அராவலை என்றால் அருளாததால் உய்யமே.*

*(பெரும் நிதம்ப – பொல்லாத அல்குல்; கருந்தாதை – இரும்பாலாகிய விலங்கு; மின் – பிரகாசம் பொருந்திய கோமதித்தாய்)*

சிறந்த புன்னைத் தலத்திலுள்ள கோமதித்தாயே! பெண்களிடம் மையல் கொண்டுள்ளோம். ஆகையால் உழன்று துன்புறுகின்றோம். அந்தத் தீ ஊழாகிய இரும்பு விலக்கினை அராவி அம் மோக ஆற்றலைக் கெடுக்க அருள வேண்டும். இல்லாவிட்டால் எங்களுக்கு எந்த காலத்திலும் உய்தி கிடைக்காது.

மிகவும் வலிமை வாய்ந்த இருப்பாலான வில்ங்கே விதியாகும். அதனை அரத்தால் அராவிப் பெண்களது மையல் என்ற துன்பத்திலிருந்து விடுவிக்கக் கோமதித்தாய் அருட்கண் மேற்கொள்ளாவிடில் ஒரு போதும் உய்யும் வழியே கிடையாது என்பது சுவாமியின் தீர்க்க சிந்தனையில் உருவான கொள்கையாகும்.

'ஊழ்வான் கருந்தாதை அராவலை என்றால் அருளாததால் உய்யமே' என்பது அவர் வாக்கு.

'மிக்க பலம் பொருந்திய புலனுணர்வுகளின் கூட்டம் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்) வித்வான்களையும் இழுத்துவிடுகிறது. தன் வயப்படுத்துகிறது' என்று கூறுகிறது மகான்களின் வாக்கு. (பலவாந் இந்திரியக் ராம: வித்வாம்ஸமபி கர்ஷதி),

அதனால் தான் அக் கூட்டம் 'இரும்பாலாகிய விலங்கு', என்று சுவாமியால் குறிப்பிடப்படுகிறது.

காமத்தை வெளிப்படுத்தாமல் கட்டுப்பாடோடு மறைத்துப் பாதுகாத்தாலும், அது குறிப்பின்றித் தும்மல் போல் தோன்றிவிடும் என்கிறார், வள்ளுவர். அதனால்தான் அது இரும்பாலாகிய விலங்கு என்று குறிப்பிடப்படுகிறது.

''முற்பிறவியிலும், இப்பிறவியிலும் நற்செயல்களிலீடுபட்டு எவர்களது பாபம் முழுமையாக ஒழிக்கப்பட்டுள்ளதோ, அவர்களே என்னிடம் பக்தியில் உறுதியாக ஈடுபடுவர்'', என்கிறார் கீதாச்சாரியன். (அத். 7, சுலோகம் 29)

கீதாச்சாரியன் வாக்கு மூலம் நாம் அறிவது: பாபம் முழுவதும் ஒழிக்கப்பட்டால்தான் பக்தி நெறியில், சரணாகதி தத்துவத்தில் உறுதியாக ஈடுபட முடியும்.

பக்திநெறியில் உறுதியாக ஈடுபட்டால்தானே பாபம் முழுவதும் ஒழிக்கப்படும். இல்லையா?

ஆசைகளை அகற்றினால் தான் ஆத்மாவைக் காணமுடியும். ஆத்மாவைக் கண்டால்தானே ஆசைகளை அகற்ற முடியும். இல்லையா?

இது எப்படியிருக்கிறதென்றால், கல்யாணம் முடித்தால் பைத்தியம் தெளியும். பைத்தியம் தெளிந்தால்தானே கல்யாணம் முடிக்க முடியும். இல்லையா?

ஆம்! பைத்தியம் தெளிந்தால்தானே பெண்ணும் கொடுப்பார்கள்.

நடக்கக் கூடாத இந்த நிலையில் ஏதாவது ஒன்றைத் திட உள்ளத்துடன் செயல்படச் செய்ய வேண்டும். அப்பொழுது எல்லாம் சரியாகிவிடும்.

துணிந்து பெண் கொடுத்துக் கல்யாணம் நடத்தி விட்டால், பைத்தியம் தானாகத் தெளிந்து விடும்.

அதுபோல் ரெட்டியார் சுவாமி ஒரு தர்மத்தைக் கூறுகிறார்.

பெண்களிடம் கொண்டுள்ள இரும்பாலான விலங்கையொத்த மையலை கோமதித்தாயின் அருட்கடாட்சம் என்ற அரத்தினால் அராவி அறுத்து விட்டால் அவளிடம் பக்தி ஏற்பட்டு மேலான வாழ்வில் உய்வடைய முடியும்.

அவளிடம் பக்தி ஏற்பட்டு மேலான வாழ்வில் உய்வடையும் பொழுதுதானே, அவளது அருளாகிய அரத்தால் பெண்களிடம் கொண்டுள்ள விலங்கையொத்த மையலை அறுக்க முடியும். இல்லையா?

ஆம்! இந்த தர்ம சங்கடமான நிலையிலிருந்து விடுபட, ரெட்டியார் சுவாமி, கோமதித்தாயிடம் அடைக்கலமடைகிறார். '**ஊழ்வன் கருந்தாதை அராவலை என்றால் அருளாததால் உய்யமே**', என்று பிரார்த்தனை செய்கிறார்.

சூழ்நிலைக் கைதியாக யிராமல் பொறுப்புணர்ந்து கடமை ஆற்றுவது; மனத்திண்மை பெறுவது; தன் அறிவுப் பூர்வமாகச் செயல்படுவது; எதனையும் சோதனைக்கு உட்படுத்தி அறிவு வெளிச்சத்தில் அலசி ஏற்றுக் கொள்வது, பொது விமர்சனங்களுக்கு ஆளாகாமல், அச்சப்படாமல், அடுத்தவர் கைப்பாவையாக மாறாமல், மற்றவர் போல் வாழாமல், தன்சுய சிந்தனைப்படி வாழ்வை வரையறை செய்து கொள்வது போன்ற அரிய பண்புகளின் கலவைக் கூடமே நம் **ரெட்டியார் சுவாமியின் இதயம்** என்பதை அவரது கவிகளில் ஆழங்காற்பட்டு அனுபவிக்கும் பொழுது உணர முடிகிறது.

அந்த இதயக் குரல் நாடும் நகரமும் நன்கு ஒலிக்கப்பாடும் மனமுடைய பக்தர்களுக்கும், தொண்டர் பெருமக்களுக்கும் கோமதி அம்மையாரின் அருட் கடாட்சம் உரிய காலத்தில் நிச்சயம் கிடைக்கும். சுருக்கமாகக் கூறினால் நம் சுவாமி அவரை மட்டும் அவருக்கு ஆசானாகக் கருதி எந்நிலையிலும் தம் அறிவுக் கதவுகளைத் திறந்து வாழும் ஒரு சுதந்திர மனிதனாகவே வாழ்ந்தார்.

அதனால் மக்களிடம் சமத்துவம், சகோதரத்துவம் போன்ற அரிய பண்புகளைச் சாகுபடி செய்ய முடிந்தது.

ஆயர் குலம் விடுய்யத் தோன்றிய கருமாணிக்கச் சுடர், கண்ணபிரான்.

ரெட்டியார் குலம் வீடுய்யத் தோன்றிய அணி விளக்கு, ரெட்டியார் சுவாமி.

அவர் தூண்டிய வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கின் சுடர் – **'ஊழ்வன் கருந்தாதை அராவலை என்றால் அருளாததல் உய்யமே!**

உடலையே ஆத்மாவாக நினைக்கிறவர்கள், உடற்பற்று மிகுந்தவர்கள்.

அவர்களுக்கு ஆத்மா, உடலைக் காட்டிலும் வேறுபட்டது என்ற அறிவு செயல்படுவது பெருங் கஷ்டம்.

அவர்கள் ஆத்மாவை வேறுபட்டவனாக உணர்ந்து, புலன்களுக்குப் புலப்படாதவனான இறைவனிடத்தில் மனதைச் செலுத்துவதென்பது எளிதில் நடைபெறும் காரியமல்ல.

எளிதில் நடைபெறுவதற்காகவும், உடற்பற்றிலுண்டான இன்பத்தை மாற்றிப் **பாவனா சக்தியை** வளர்த்து அதன் மூலம் இறைவனிடம் புலனின்பத்தைச் செலுத்தும் பயிற்சிக்காகவே உருவ வழிபாடு (அர்ச்சை வழிபாடு) ஏற்பட்டுள்ளது.

**இறைவனை உபாயமாக மட்டும் கருதாமல், இன்பமாகக் கருதுவதற்காகவே உருவ வழிபாடு ஏற்பட்டுள்ளது.**

'தத்துவங்கள் இறைவன் திருமேனி உருவில் காட்சியளிக்கின்றன' என்று ஆசாரிய புருஷர் சுவாமி தேசிகன், 'தத்துவத்திரய சிந்தநாதிகாரத்தில்' அருளிச் செய்கிறார்.

தத்துவ மேதை டாக்டர் இராதாகிருஷ்ணன் அவர்கள் இறைவன் திருக்கோல உருவத்திற்கு விளக்கம் தரும்போது, 'எத்தகைய ஞான, விஞ்ஞான விளக்கங்களைத் தந்தாலும் அது ஒரு கவிதை' (It is a poetry neverthless a science) என்று கூறினார்.

அவரது வாக்கின்படி ஒரு மனிதனின் மனத் தெளிவு, நுட்பமான அறிவுத் திறனைப் பொறுத்தே அவன் காண்கின்ற கவிதையில் வெளிப்படும் ஆழமான தத்துவங்கள்.

அதுபோல் இறைவனது தெய்வத் திருமேனி அழகிலும் அவன்து நோக்கும் முறைகளையும் பொறுத்து மனத் தெளிவிற்கேற்ப குரு அருளால் அவனுக்குத் தத்துவங்கள் புலனாகும்.

கோதை நாச்சியார், எகலைவன், வைணவ - சைவ சமயாச்சாரியார்கள், ஆழ்வார்கள், நாயன்மார்களுக்குப் புலப்பட்டன. எந்த பல்கலைக் கழகங்கள் பக்கத்திலும் ஒதுங்காத அவர்களுக்கு வாழ்வியல் தத்துவங்கள் புலப்பட்டன.

எப்படிப் புலப்பட்டன?

குரு அருளால் உறுதியான நம்பிக்கையிலிருந்து விலகாமல், இறைவனது உருவில் பாவனா சக்தியை வளர்த்துக் கொண்டமையால் அவர்களது ஆத்மாவின் உண்மை சொருபமான ஞான ஆனந்தம், வாழ்வியல் தத்துவங்களாகப் புலப்பட்டன.

அறிவிற்கும் மூளைக்கும் அப்பாற்பட்டு இயங்கும் ஆன்ம வொளியை, குரு அருளால் உருவாகும் பாவனாசக்தியின் மூலமே உணர முடியும். உணர்வது பெரும் புண்ணியம் என்பது ஆண்டாள் கருத்து.

அறிவு ஒன்றும் இல்லாத குலம், ஆயர் குலம். ஆனால் அவர்கள் செய்த புண்ணியச் செயல்களின் காரணமாகப் பிறக்கும் பொழுதே பக்தியுடையவர்களாகப் பிறந்து விட்டார்கள். அதனால் அவர்கள் புண்ணியமுடையவர்கள். அக்குலத்தில் தோன்றிய கிருஷ்ணபிரானுடைய மகிமையை உணர்ந்து கொண்டார்கள், என்று திருப்பாவையில் ஆண்டாள் கூறுகிறாள். 'அறிவொன்றுமில்லாத ஆயக் குலத்து, உன்றன்னைப் பிறவிப் பெருந்தனைப் புண்ணியம் யாமுடையோம்', என்பது அவள் வாக்கு.

அவள் வாக்கின் மூலம் நாம் அறிவது - அறிவுக்கும் மூளைக்கும் அப்பாற்பட்டு இருந்துகொண்டு அவைகளை இயக்குவது ஆன்ம ஒளியே என்பதைப் பாவனா சக்தியின் மூலம் உருவாகும் பக்தியால் உணர முடியும் என்பதாம்.

உருவ வழிபாட்டில் ஆழங்காற்பட்ட உள்ளமுடன் ஈடுபடுபவர், ரெட்டியார் சுவாமி.

அவர், கோமதித்தாயின் திருவுருவ அழகிலீடுபட்டுக் கூறுகிறார்.

விடத்தினுடைய கைப்புச் சுவையை சிறந்த அமுதம் போன்று இனிமையாக்குவாள், கோமதித்தாய். அதனை அறிந்து மை பூசப் பெற்ற உனது திருக் கண்ணினின்றெழும் கிருபா கடாட்ச நோக்கத்தைத் தெரிந்தே உனது சிறந்த முக்தியாம் எல்லையை அடைய உலக மக்கள் எல்லோரும் உன் திருக்கோயில் அடைந்து வணங்குவர் என்கிறார்.

*''ஆலக் கைப்பு ஆர் அமுது ஆக்கும் மைக்கண் அருளைக்*
*கண்டு உய் தம்*
*மா லக்கைப் பாரவர் எல்லாம் அடைந்து வணங்குவரே.*

*(மா இலக்கை – சிறந்த குறிக்கோளை அடைய)*

'பசித்தவன் பக்தி பண்ண முடியாது', என்பர் பக்த கபீர். (பூகே பக்த நஹோ இ குசாயீ)

அதனை உணர்ந்த நம் சுவாமி கோமதியம்மையாரிடம் 'உன்னைப் போற்றத் தக்க நிலையில் நான் நன்கு விளங்கும்படி அதாவது பிறர் எம்மை மதிப்பு, மரியாதை கொடுக்கும்படி என்றும் நிலைபெற்றிருக்கத்தக்க பல்வகைச் செல்வங்களையும் எமக்கு அருள் செய்வாயாக என்று பிரார்த்திக்கிறார்.

*'வாழ்த்து அலரப் பண்ண இருந்த தனம் அவை தான் என்னுள் பாலி'*

– என்பது அவர் வாக்கு.

## 10. நின் பணிக்கு ஆக்குதி

*தனம் செருக்கால் உதட்டைத் திறவாப் புல்லர் தம்மைப் புகழ்*
*என் நச்சு எரு காலும் முன் நின் பணிக்கு ஆக்குதி ஈரம்இல்லாச்*
*சினம் செருக்கால் உருளைக் காலின் அட்ட நல் தீரன் மது*
*பல் நச்சு எருக்கு ஆலும் சடையானைத் தோய் புன்னைப்*
*பைங்கிளியே.*

*(காலும் – எமனும்; தோய் – பாகத்தில் கொண்டுள்ள; ஆலும் – தொங்கும் தன்மையுள்ள; புகழ் என் நச்சு – புகழக் கூடிய விருப்பம்; மது – ஆற்றல் வாய்ந்த)*

கோமதி அம்மையே! கர்வங் கொண்டுள்ள அற்பச் செல்வர்களைப் புகழ்வதினின்றும் தடுப்பாயாக என்னை; ஆட்கொள்வாயாக, என்னை!

உன்னைப் பாடும் பணிக்கே அருள் செய்வாயாக! என்னை ஆற்றுப்படுத்துவாயாக! என்கிறார்.

கோமதியம்மையிடம், 'என்னை நரகத்தில்தள்ளும்முன்பு அதனைத் தடுத்து அடியேனை உன்னைப் பாடித் துதிக்கும் தொண்டுக்குத் தகுதியுள்ளவனாகச் செய், என்கிறார், ரெட்டியார் சுவாமி.

நரகத்தில் தள்ளும் அளவிற்கு அவர் என்ன பாவம் செய்தார்?

செல்வம் மிகுந்து அதனால் ஏற்பட்ட கர்வத்தால் வாயினைத் திறந்து பேசவும் விரும்பாத அற்பர்களைப் புகழ வேண்டும் என்று அவர் கொண்ட விருப்பமே, நரகத்தில் தள்ளும் அளவிற்கு அவர் செய்த பாவம்.

*''தனச் செருக்கால் உதட்டைத் திறவாப் புல்லர் தம்மைப் புகழ்*
*என் நச்சு எரு க்காலும் முன் நின் பணிக்கு ஆக்குதி...''*

– என்பது அவர் வாக்கு.

மதிக்க வேண்டியதில்லை – தன் துன்பங்களை வெளிக்காட்டாமல் இருப்பவர்களை.

உயர்வாக மதிக்க வேண்டும் – தம் மகிழ்ச்சியை வெளிக்காட்டாமல் இருப்பவர்களை.

பிறர் அறியாததை வைத்து மதிக்கக் கூடாது – அறிந்துள்ள அவர்களை.

மதிக்க வேண்டும் – அவர்கள் எவ்வாறு, எம்முறையில் அவ்விசயத்தை அறிந்துள்ளார்கள் என்பதை வைத்து.

இந்தப் பொது விதியின் மூலம் ரெட்டியார் சுவாமியின் இதயக் குரல் எழுப்பி விடும் ஒலி அலைகளை இரசிப்போம்; தெளிவடைவோம்; குரு அருளால் கடைப்பிடிக்க முயல்வோம்.

செல்வம் வந்து சேர்ந்த நிலையில் சிலர் அறிமுகமானவர்களிடமே அதிகம் பேசாத அற்பகுணம் உடையவர்களாகி விடுவர். இந்தப் பொதுவான நிலைமை தெரிந்தும்கூட, நல்ல கருத்தை நயமுடன் விளக்கும் அற்புதக் கலைக் கைவரப் பெற்றவர்களும் சில சமயங்களில் தன் நிலையிலிருந்து விலகி விடுகிறார்கள். தன் உரிமைகளை இழிவுபடுத்திக் கொள்கிறார்கள்.

சந்தர்ப்பமும் சூழ்நிலைகளும் சேர்ந்ததால், 'ஆசை யென்னும் போதை மருந்தை' உட்கொள்கிறார்கள். வெட்கத்தை விரட்டி விட்டுத் தனி நபர் வழிபாடுகளிலும் முகஸ்துதிகளிலும் இறங்கிவிடுகிறார்கள். இவர்களுக்கு நரகம் தான் (தீங்குகள் நிறைந்த இடம்) சித்திக்கும்.

அதனை நன்கு உணர்ந்தே தானும் சந்தர்ப்ப வசத்தால் அப்படிப்பட்ட நிலைக்கு ஆளாகி விடுவோமோ என்று அஞ்சிய ரெட்டியார் சுவாமி, 'எரு **காலும் நின் பணிக்கு ஆளாக்குதி'** என்று கோமதித்தாயிடம் பிரார்த்தனை செய்கிறார்.

அவர் விண்ணப்பத்தை ஏற்றுத் தம் பணிக்கு ஆளாக்கி விட்டாள்.

உடனே அவர், அருள் பெற்று முற்றிய ஞானிகள் முன்னர், தம் திருவடிகளை நாயேனுக்குச் சூட்டி அருள்பாலித்தனள். கற்பார்ந்த காலம் காலமாக அவளது அருளொளி இவ்வுலகத்தின் கண்வீசிச் சிறந்து விளங்கட்டும். அதனால் அந்தக் கோமதியம்மையின் புகழ்களை ஆராய்ந்து நாள்தோறும் முத்தமிழாலாகிய பாடல்களைச் சிறந்த பதக்கமாலையாக நினைத்து அவளுக்குச் செலுத்தும் நன்றிக் கடனாக அணிவேன் என்கிறார்.

*வரு வித்தின முத்தர் முன் தாள் எற்கு ஈந்தனள் வாழ்க கற்பகம்*
*துருவித் தினம் முத்தமிழ் வடகாரத்தில் சூட்டுதுமே,''*

– என்பது சுவாமியின் வாக்கு.

*(வரு வித்தின – தரிசனத்திற்கு வரும் அருள்பெற்று முற்றிய; எற்கு – நாயேனுக்கு)*

உலகில் தீமை தவிர்க்க முடியாத அங்கம் எனக் காட்டவே பாற்கடல் கடையும் பொழுது அமுதுக்கு முன் ஆலகால விஷம் வந்தது.

இன்ப லோகங்களுக்கு முன் நரகம் தோன்றியுள்ளது.

மானுடருக்கான அறங்கள் 'தர்மன்', என்ற மூர்த்தியாகப் பிரம்மாவின் வல மார்பினின்றும் வெளிப்பட்ட அதே பொழுதில், அதர்மமும் பிரம்மாவின் பின்புறத்திலிருந்து தோன்றியதாகப் புராணம் கூறும்.

அதுபோல தர்மமும் ஞானமும் வைராக்கியமும் வளர்செல்வமும் சாந்தியும் தியாகமும் விருத்தியாகி, நம் சக்தியை ஆக்கப்பூர்வமான செயல்களுக்குப் பயன்படுத்த குண அலங்காரத்திற்கு அணியும், அணிகளுக்கு

முன், உடல் அலங்காரத்திற்கு அணியும் விதவிதமான அணிகலன்கள் உண்டாகி விடுகின்றன. காமப் புயலில் சிக்க வைக்கின்றன. பணிவும் இன்சொற்களுமே ஒருவருக்கு அணிகலன்கள் என்பர் வள்ளுவர்.

அவரவர் மனத் தெளிவிற்கேற்ப அவரவர் காணும் பொருள்கள் உயர்வாகத் தெரியும். ஞானிகளுக்குக் குணநலன்களே அணிகலன்களாகத் தெரியும். சித்தத்துக்கு மூலமான அகங்காரம் நீங்க, கோமதியம்மையாரின் ஆராதனையே வழி என்ற உண்மையை உணர்ந்த ரெட்டியார் சுவாமிக்கு, அந்த அம்மையாரின் புகழைப் பாடும் பாடல்களின் தொகுப்பே அவரது கழுத்தில் அணியும் **பதக்கமாலை** யாகும்.

ஒருவரது வாழ்வில் செயல்கள், சிந்தனைகள் இவற்றின் சராசரி விளைவே இறக்கும் நேரத்தில் ஒருவரது உணர்வுகளுக்கு அடிப்படையானதாகின்றது.

'மனிதரது கடைசி காலத்தில் எந்தெந்த சொரூபத்தை சிந்தித்த வண்ணம் உடலை விடுகிறாரோ அந்தந்த சொரூபத்தை அடுத்த பிறவியில் அடைகிறார். (கீதை அத்.8, சுலோ.6)

''உன்னியுணர்ந்து உன் நாமம் சொல்ல'' என்று தான் பெரியோர் கூறுவார்கள். ''உற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே குற்றாலத்தானையே கூறு'' என்ற போது அந்திம காலத்தில் வேறு எவரையோ நினைத்து அவன் பெயரைச் சொல்லாமல், அவனையே சிந்தித்துச் சொல்ல வேண்டும் என்றுதான் அடிகள் ''குற்றாலத்தானையே'' என்கிறார்.

நிழற்படம் (போட்டோ) எடுப்பவர் எல்லோரையும் எச்சரிக்கையாக முகத்தை மலர்ச்சியாக வைத்துக் கொள்ளுங்கள் என்று கூறுகிறார். வைத்துக் கொள்ளாவிடில் உருவம் அலங்கோலமாயிருக்கும்.

அதுபோலவே எல்லாப் பிராணிகளையும் நிழற்படம் எடுக்கும் இறைவன், கடைசிக் காலத்தில் மிகுந்த சிரத்தையுடனும், அன்புடனும் அவனது குணங்கள், மகிமைகள் நிறைந்த அவனை இடைவிடாது சிந்திக்கச் சொல்கிறார்.

கடைசிக் காலம் எப்பொழுது என்று யாருக்குத் தெரியும்? தெரியாது.

எனவே சதா காலமும் பகவத் சிந்தனையில் இருக்க வேண்டும். குரு அருளால் தான் முடியும்.

இந்தத் தத்துவத்தை நன்கு உணர்ந்த ரெட்டியார் சுவாமி. "... அம்மையே! உம்முடைய திருவடித் தாமரைகளாகிய புகழுக்கு உரிய செல்வத்தை (இறுதிக் காலத்து) விதியின் வலிமையானது வந்து துள்ளி வருகின்ற காலத்து சங்கில் பால் கரைத்துக் (குழந்தைக்கு) ஊட்டுவதுபோல், ஊட்டுவாயாக, என்று கோமதித்தாயிடம் வேண்டிக் கொள்கிறார்.

*... அமே! உம் புகழ்பத கஞ்சம் சங்குக்குள் கரைத்து*
*ஊழ்தனம் ஏயும் துளும் கடை நா வந்து உதவுவையே"*

– என்பது அவர் வாக்கு.

*(பத கஞ்சப் புகழ் – திருவடித் தாமரைகளாகிய புகழுக்குரிய செல்வம்; ஊழ் தனம் – விதியின் வலிமை; கடை நா வந்து – கடைவாயில் கொண்டு வந்து)*

சுவாமி கோமதியம்மையின் திருவடிப் பேற்றை இறுதிக் காலத்து ஒரு குழந்தைக்குப் பாலூட்டுவது போன்று உதவுமாறு வேண்டுவது ஆழ்ந்து சிந்தித்து உணரத் தக்கதாகும்.

## 11. கல் நடுங்கும் கரும் சிந்தை உலோபர்

*உதவாக் கை கல் நடுங்கும் கரும் சிந்தை உலோபரை மன்*
*மத! ஆக்கு ஐ! கன்ன! மழை முகிலே! என்று வாழ்த்தலை புற்*
*புத ஆக்கைக்கு அன்னம் இடற் பொருட்டாய் செப்புவார்*
*உயர் சூ*
*முத வாக்கைக் கன்னம் புகக் கோமதிக்கே மொழிந்திலரே.*

*(கன்ன – கொடையிலே சிறந்த கர்ணன்; புற்புத ஆக்கை – நீர்க்குமிழி போல் நிலையாமையுடைய இவ்வுடம்பு; சூமுத – மேலான உயர்வு தரும்; கன்னம்புக – செவியில் நன்கு புகும்படி)*

அழியத்தக்கது இவ்வுடம்பு. இதனை வளர்ப்பதற்காக வீணாகப் புகழாதீர் – கருமிகளை. உயர்வான குறுதி தரத்தக்க (தெய்வீக உணர்வு என்னும் பெரும் பதம் கொடுக்க வல்ல) கோமதி அம்மையை நன்கு துதிப்பீர்; அவள் திருச் செவியில் புகும்படிப் புகழ்ந்து பாடுவீர் என்கிறார்.

உயர்குடி, அதிகாரம், கல்வி, செல்வம் இவற்றில் செருக்குற்றவராக வாழ்ந்து கொண்டுப் பிறருக்குச் சிறிதும் உதவி செய்யாதவர்களுடைய மனமானது கல்லின் வலிமையைக் காட்டிலும் மிகவும் கடுமையாக இருக்கும் என்று அந்தக் கருமிகளைக் **'கல் நடுங்கும் கரும் சிந்தை உலோபர்'** என்று அற்ப வாழ்வு நடத்தும் அவர்களை நமக்கு அறிமுகப்படுத்துகிறார், ரெட்டியார் சுவாமி.

நல்ல முறையில் செலவு செய்து புண்ணியம் சேர்க்காமல், பிற்பாடு கெட்ட முறையில் செலவு செய்து அதனால் பாபச் சுமையை மூட்டை கட்டிக் கொள்பவர்கள், **'கல் நடுங்கும் கரும் சிந்தை உலோபர்'**

உயரிய சிந்தனையாளர்கள் கூடத் தம் சிந்தனைகளை செயல்வடிவமாக்காமல், வாய்ச் சொல் வீரர்களாக, எளிய வாழ்க்கை வாழாமல் அற்பத்தனமான போலி வாழ்க்கை நடத்துகிறார்கள், அவர்கள் **'கல் நடுங்கும் கரும் சிந்தை உலோபர்'**

உலகிலுள்ள படைப்புகள் அனைத்தையும் அர்த்த புஷ்டியுள்ளதாகக் கருதமாட்டார்கள். அவர்களுடைய கண்ணோட்டத்தின் வாயிலாகவே கருதும் பணிகளே மிகவும் சாலச் சிறந்தது என்ற எண்ணத்தில் செயல்படுவார்கள். அவர்கள் **'கல் நடுங்கும் கரும் சிந்தை உலோபர்.**

வாழ்க்கையில் ஒரு பிடிப்பான இலட்சியம் இல்லாமல், இன்று ஒரு பாடகனாக, நாளை ஒரு விளையாட்டு வீரனாக், அதற்கு மறுநாள் ஒரு அரசியல்வாதியாக, மத விசயங்களை விவரிக்கும் பௌராணிகராக ஆக வேண்டுமென்றுத் தன் தகுதியை ஆராய்ந்து சிந்திக்காமல் புகழுக்கு ஆசைப்பட்டுப் பகற் கனவு கண்டு கொண்டு இருப்பார்கள்.

வெட்டுக் கிளிபோல் அவர்கள் ஒன்றிலிருந்து மற்றொரு விஷயத்துக்குத் தாவிக் கொண்டு ஒன்றிலும் ஒட்டாத நிலையில் திடசித்தமில்லாதவர்களாக, அழுத்தமான நினைவாற்றல் பெறாதவர்களாக, வினோதமான மனப்பாங்குள்ளவர்களாகத் திரிவார்கள் அவர்கள், **கல் நடுங்கும் கரும் சிந்தை உலோபர்.**

காம, க்ரோத, லோபம் என்ற நரகத்தின் வாயிலுக்குள் செல்ல முண்டியடித்துக் கொண்டிருக்கும் அந்த உலோபர்களை இனம் கண்டு கொண்டால்தான் நாம் எச்சரிக்கையாக வாழ முடியும்.

நிராகரிக்க வேண்டும் - விரும்பத் தகாததை. மேலோர் மூலம் அறிந்து அனுமதிக்க வேண்டும் - உண்மைப் பொருளை.

அதற்கு ஒரு சல்லடையைப் போல் செயல்படும் **'விவேகம்'** எப்பொழுதும் பாதுகாத்துத் தீவிரப்படுத்த வேண்டும்.

அப்பொழுது மேலும் மேலும் உறுதியாகும் - **மனோபலம்**. பிளவு படாது - **வைராக்கியம்**. நிரந்தரமாகச் செயல்படும்.

பிரகாசிப்பது - விழிப்புணர்வு. கம்பீரமாகக் காட்சியளிப்பது - ஞானமாகிய பெரும் மாளிகை.

அம்மாளிகையிலுள்ளவர்களே திடசித்தமுடையவர்களாக, நிலைத்த மதியில் செயலில் ஈடுபடுபவர்களாக வாழ்வார்கள்.

மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகிய மூவாசைகளைத் துறந்தவர்கள் கூடப் புகழாசையைத் துறக்க மாட்டார்கள்.

விசுவாமித்திரரும், வசிஷ்டரும் அதற்கு உதாரணம்.

மனித அபிலாஷைகளைத் தூண்டி, அவனுடைய பலகீனத்தைத் தவறான வழியில் உபயோகப்படுத்தக் கூடாது.

மறைமுகமான காரணங்களை மனதிலிறுத்திக் கொண்டு, அவனைப் புகழேணியின் உச்சிக் கொண்டு போய் அமர்த்தக் கூடாது, என்பது ரெட்டியார் சுவாமியின் கொள்கையாகும்.

கருமிகளை, 'அழகிய மன்மதனுக்கு ஒப்பானவனே! உலகைப் படைக்கும் பிரம்மனே! கொடையில் தன்னிகரில்லாத கர்ணனே! மழை போன்று எல்லா உயிர்களையும் காக்கும் மேகம் போன்றவனே! எனப் பலவாறாக வீணாகப் புகழாதே' என்று உண்டியே, உடையே என உகந்து ஓடித் திரியும் வீணர்களை எச்சரிக்கை செய்கிறார்.

*....... உலோகபரை மன்*

*மத! ஆக்கு ஐ! கன்ன! மழை முகிலே! என்று வாழ்த்தலை...''*

- என்பது அவர் வாக்கு.

'நா' கொண்டு மானுடம் பாடும் கவிகள் மலிந்து திரியக் காரணம், 'எனக்கு அன்னியரல்லாராய், என்னையே நினைத்து எக்கணமும் என்னையே

உபாசிக்கும் நித்திய யோகிகளுடைய புற அகத் தேவைகளை நானே வழங்குகின்றேன்' என்ற கீதாச்சார்யன் வாக்கு, குரு அருளில்லாமையால் மனத்திரையிலிருந்து அழிக்கப்பட்டதேயாகும்.

நம் சுவாமிக்கு கோமதியம்மை அருளால் அழிக்கப்படவில்லை. அதனால் அவர் வருத்தமுடன் கூறுகிறார்.

'நீர்க்குமிழி போன்று நிலையாமையுடைய இவ்வுடம்பிற்கு உணவு கொடுப்பதற்காகப் பலவாறு அக்கருமிகளைப் புகழ்ந்து மக்கள் பேசுகிறார்கள். மிகவும் மேலான உவகை தரும் அருளாளர்களின் திருவாக்குகளைச் செவியில் நன்கு கேட்கும்படிக் கோமதித்தாயைப் புகழ்ந்து பாடாமலிருக்கிறார்களே, என்று தனி நபர் புகழ்பாடும் கவிகளைப்பற்றி வருந்திக் கூறுகிறார்.

வாழ்க்கையில் ஒவ்வொரு கணமும் அரியதாக மாறி, ஏதோ ஒரு உயர்ந்த செயலிலோ, ஒழுங்கான சிந்தனையோட்டத்திலோ நேரம் கழிக்கும், ரெட்டியார் சுவாமியின் உள்ளம்.

*''புற்புத ஆக்கைக்கு அன்னம் இடற் பொருட்டாய் செப்புவார் உயர் சூ*
*முத வாக்கைக் கன்னம்புகக் கோமதிக்கே மொழிந்திலரே.''*

– என்பது அவர் வாக்கு.

*(புற்புத ஆக்கை – நீர்க்குமிழி போன்ற நிலையாமையுடைய இவ்வுடம்பு; சூமுத – மேலான உவகை தரும்; கன்னம்புக – செவியல் நன்கு புகும்படி)*

மலைப்பாம்பின் வாயில் விழுந்த ஒருவன், பிறருக்கு உதவ முடியாது.

அதுபோல அறியாமை, தீவிரம் போன்ற குண–கர்ம–காலக் கட்டுகளில் அகப்பட்ட ஒரு மனிதன் இன்னொரு மனிதனைக் காப்பாற்ற முடியாது.

நூறு ரூபாயைத் தொலைத்து விட்டு அந்த ரூபாயின் மேல் நின்று கொண்டு அதைத்தேடினால் அது கிடைக்குமா?

கிடைக்காது. அதுபோல அவரவர்கள் செய்த வினையாகிய வன்மையான கயிற்றால் திண்ணம் அழுந்தக் கட்டப்பட்ட மனிதன், அவன் கட்டுகளையே அவிழ்க்க முடியாத நிலைமையிலுள்ள மனிதன், மற்றொரு மனிதனைக் காப்பாற்ற முடியுமா?

முடியாது. கருணை குணம் இல்லா லோப குணம் உடையவர்களிடம் எந்தவொரு நல்ல குணங்களும் இருக்க முடியாது.

ஆற்றுப் படுக்கையிலுள்ள பொருள்களை ஆற்றில் தண்ணீர் ஓடும் பொழுது கொண்டு சென்றுவிடும்.

அதுபோல ஒரு மனிதனிடமுள்ள 'லோப குணம் என்ற ஆறு' அவனிடமுள்ள எல்லாக் குணங்களையும் கொண்டு சென்றுவிடும் என்று கவிச்சக்கரவர்த்தி கம்ப நாட்டாழ்வார் கூறுவார்.

*''உளப்பரும் பிணிப்புறா லோபம் ஒன்றுமே அளப் பரும்*
*குணங்களை அழிக்கும் ஆறு''*[1]

– என்பது அவர் வாக்கு.

எனவே உலோப குணம் உள்ளவர்களைப் புகழ்ந்து பாடும் கவிகள் அறியாமையால் செயல்படுகிறார்கள். கீழ்த்தர இசைக்கு கவர்ச்சி அதிகம். கீழ்தர இச்சைகளுக்கு அடிமையாகி ஆத்மாவிற்கு ஊறு பயக்கும் செயல்களில் அறியாமையால் ஈடுபடுகிறார்கள்.

மக்களின் மேன்மையான நன்மைகளுக்காக உழைப்பதற்கு இறைவனால் கொடுக்கப்பட்ட சொத்தே, கவிகளது வாக்கு வன்மை.

அத்தனை மக்கள் நன்மைக்காகவே அத்தியாவசியத்துக்கு மாத்திரமே அந்த அற்புத ஆற்றலை உபயோகப்படுத்த வேண்டும். அதனை விட்டு விட்டுச் சுயநலத்தில் பிறரை ஏமாற்ற உபயோகிப்பது ரெட்டியார் சுவாமிக்குப் பிடிக்காத கொள்கையாகும்.

## 12. உமக்கு உய்வகை சொல்லுவன்

*என்ன தவம் புரிந்தாலும் பெறீர் இ அவனம் பல் நூல்*
*சொன்ன தவம் புரிவால் உமக்கு உய் வகை சொல்லுவன் பொன்*
*உன்னத அம் புரிசை வரராசை உற்று உச்சி மிசை*
*சன்னதம் அம்புரி அன்பு ஆகி தாள் தொழில் சார்வர் மெய்யே.*

சங்கர நயினார் கோயில் செல்ல வேண்டும். கோமதியம்மையின் திருக்கோயிலில் உண்மையன்புடன் விரதம் மேற்கொள்ள வேண்டும். அவள்

திருவடி இணைகளைத் தொழ வேண்டும். உண்மைப் பயனாகிய திருவருளின் பேறு கிட்டும்.

எத்தகைய நோன்பினைச செய்தாலும் இத்தகையச் சிறந்த பெருமைகளை உங்களால் பெற இயலாது. பல சாத்திரங்களிலும் கூறப்பெற்ற மேன்மையான செயல்களை விருப்பத்தால் உங்களுக்கு உயிர் உய்தி பெறும் பொருட்டுக் கூறுவேன் என்கிறார், ரெட்டியார் சுவாமி.

*என்ன தவம் புரிந்தாலும் பெறீர் அ வனம் பல் நூல்*
*சொன்ன தவம் புரிவால் உமக்கு உய்வகை சொல்லுவன்...*

– என்பது அவர் வாக்கு.

'அதைக்கொடு... இதைக் கொடு' என்று இறைவனா நம்மிடம் கேட்கிறான்?

இல்லையே! நாம் தான் அவனிடம் பிரார்த்தனை என்ற பெயரில் 'எனக்கு அதைக்கொடு... நான் உனக்கு இதைக் கொடுக்கிறேன்', என்று சதா நச்சரித்துக் கொண்டிருக்கிறோம். 'நீ எனக்கு இரண்டு இலட்சம் ரூபாய் கொடுத்தால் உன் உண்டியலில் இரண்டாயிரம் ரூபாய் போடுகிறேன்' என்று இறைவனிடம் கமிஷன் பேசுகிறோம்.

இதைவிட வடிகட்டின அறியாமையால் ஏற்படும் செயல் வேறு எதுவும் இருக்க முடியாது.

மருத்துவரிடம் சென்ற நோயாளி அவரிடம், 'இந்த ஊசி போடுங்கள்; அந்த மாத்திரை கொடுங்கள்' என்று நச்சரிக்கவா செய்கிறான்? இல்லையே!

எல்லாம் அவருக்குத் தெரியும் என்ற நம்பிக்கையால்தானே நச்சரிக்காமல் இருக்கிறான்?

அது போல இறைவன் மருத்துவன்; வைத்திய நாதன்; வைத்தியர்களுக்கெல்லாம் தலைவன். 'மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணன்'; என்று இறைவனைப் பெரியாழ்வார் விளிக்கிறார். தன்னை அடைக்கலம் கொண்ட அடியார்களுடைய தேவைகளைக் காலம் வரும் பொழுது நிச்சயமாகப் பூர்த்தி செய்வான். ஆனால் ஆசைகளை நிறைவேற்ற மாட்டான்.

பக்தர்களது உடல், உள்ளம், ஆன்மா ஆகிய முப்பண்புகளை வளர்க்கும் குருவாக இருப்பான். மறுபிறவி ஏற்படச் செய்யாமல தடுத்து ஆட்கொள்வான்.

பிரார்த்தனை, சடங்குகள் இவற்றின் அர்த்தங்களைப் புரிந்து கொள்ளாமல் அவற்றில் போய்ச் சிக்கிக் கொள்வதற்குப் பெயர் 'வேண்டுதல்' இல்லை.

பிரார்த்தனை என்பது நம்மை நாமே அப்பியாசத்தாலும் குரு அருளாலும் முழுமையாக உணர்ந்து கொள்வதில் தான் இருக்கிறது. (Which is the most difficult things of all in the world? To know thyself) பகவத் லீலைகளை அதிகம் சிந்திக்க வேண்டும். கள்ளங்கபடமின்றி வழிபட்டு வந்தால் பகவானே நாளடைவில் பக்தி பாவத்தை விருத்தி செய்வான். நினைவிற்கும் நம்பிக்கைக்கும் உள்ள ஆற்றலை அனுபவப்பூர்வமாக உணரச் செய்வான்.

பக்த கபீர் கூறுகிறார், 'நான் கடவுளைத் தேடாத இடம் இல்லை. கோயில், குளம், கோபுரம் என்று சுற்றிச் சுற்றித் தேடினேன். கடவுள் தென்படவில்லை. கடவுளைத் தேடித் தேடிக் களைத்துப் போன நான், சரி... கடவுள் தென்படாவிட்டால் என்ன?

கடவுளைத் தரிசித்து விட்டவன் போலவும், உணர்ந்து விட்டவனைப் போலவும் என்னை நானே நினைத்துப் பார்த்துக் கொண்டேன். கடவுளை உணர்ந்து விட்டவன் போலவும் வாழத் தொடங்கினேன். இறைத் தன்மை எனக்குள் தானாகவே வந்தது.

அப்போது கபீர்... நீ எங்கே யிருக்கிறாய்? என்ற கடவுளின் குரல், என்னுள்ளிருந்து கேட்டது, என்கிறார் கபீர்.

'அடிக்கடி எனது அந்தராத்மா சொல்கிறது', என்று கூறிய மகாத்மா காந்தியின் அனுபவத்தை ஈண்டு சிந்திக்க வேண்டும்.

பழங்களையும் இனிய பதார்த்தங்களையும் சுவைத்து அனுபவித்த ஐம்புலன்களால் அவைகளுடைய இனிப்பின் வேறுபாடுகளைக் கூற இயலவில்லை. அல்வா இனிக்கிறது. ஆப்பிள் பழமும் இனிக்கிறது. ஆனால் அந்த இனிப்பின் வேறுபாட்டை ருசி பார்த்த நாக்கினால் கூற இயலவில்லை.

அதுபோல் ஐம்புலன்களால் அனுபவிக்கப்பட்ட இறையுணர்வை அவைகளால் இப்படி இப்படி இருக்கிறது என்று கூற இயலவில்லை.

அதனால்தான் '**புலனைந்துக்கும் சொல்லப்படான் உணர்வின் மூர்த்தி**' - என்று இறைவனைப் பற்றிக் குறிப்பிட்டார், ஞானி நம்மாழ்வார்.

கபீர் பக்தியின் சாராம்சமே '**நம்பிக்கை**' தான்.

பிரார்த்தனையின் சாராம்சம்தான் என்ன?

'எதையும் நம்பிக்கையோடு செய். நீ தேடியது கிடைக்கவில்லை என்றால்... அது கிடைத்து விட்டது போல நினைத்துச் சந்தோஷப்படு... அதன் பிறகாவது நிச்சயம் அதுகிடைக்கும்' என்பது தான் பிரார்த்தனையின் சாராம்சம்.

'இன்பத்தைத் தேடுபவனும் நீதான். இன்பமும் நீயே தான்' என்பதே பகவத் கீதையின் முடிவான அறிவுரை.

சத், சித், ஆனந்தம் - என்று வேதம் சொல்லும் வார்த்தையின் பொருள் அறிய வேண்டும்.

'சத்' எனப்படுவது - வாழ்கின்ற ஆசை. 'ஆனந்தம்' எனப்படுவது வாழ்கின்ற நாளில் எந்நிலையிலும் மகிழ்ச்சியாக இருப்பது. அந்த நிலையான ஆனந்தத்திற்கு தேடும் ஆன்மீக அறிவே, 'சித்' எனப்படும்.

'சத், சித், ஆனந்தம்' என்ற மூன்று நிலைகளை அடைய வாழ்க்கைப் பெருங்கடலில் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டு முத்து எடுப்பவன் போலத் தேடிக் கொண்டிருந்தார், ரெட்டியார் சுவாமி.

கிடைத்துவிட்டது, எப்படி?

கூரையில் எத்தனை தரம் உடைத்தாலும் பத்து நாட்களுக்கு ஒரு தரம் கரையான் புற்று தோன்றிக் கொண்டேயிருக்கும். கூரை மூங்கிலுக்குள் இருக்கிற தாய்ப் பூச்சியை எடுத்து வெளியில் போட்டு விட்டால்தான் கரையான் புற்று முளைக்காது.

அதுபோல மற்ற சாதனை, மார்க்கம் எதில் போனாலும் பிறவி, அதனால் துக்கம் மறுபடியும் உண்டாகிக் கொண்டுதான் இருக்கும்.

இதற்கெல்லாம் மிகவும் காரணமான அகம், புறம், பற்றுக்களான 'யான்', 'எனது' என்ற பூச்சிகளை அப்புறப்படுத்தி விட்டால் மறுபடிப் பிறவி ஏற்படாது, சத்-சித்-ஆனந்தம் ஏற்படும்.

ரெட்டியார் சுவாமி அந்த அகம் புறம் உள்ள பூச்சிகளை அப்புறப்படுத்தி விட்டார். சத்-சித்-ஆனந்தக் கடலில் மூழ்கித் திளைத்தார்.

தாம் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெற வேண்டுமென்று வழி காட்டினார்.

பொன் போன்று பிரகாசிக்கும் உயர்ந்தோங்கியுள்ள அழகிய மதில்களையுடைய சங்கரநயினார் கோவிலுக்குச் செல்லுங்கள். தலைமேல் கை வைத்துக் கூப்பி வணங்கி அந்தக் கோமதியம்மைத் திருச்சந்நிதானத்தில் அன்புடன் நல்ல காரியங்களைச் செய்யுங்கள், அவள் திருவடி சம்பத் மூலம் இன்பப் பேறு அடைவீர்கள் என்பது உண்மை. என்று தன் அனுபவத்தைக் கூறுகிறார்.

*..............பொன்*
*உன்னத அம் புரிசை வரராசை உற்று உச்சி மிசை*
*சன்னதம் அம்புரி அன்பு ஆகி தாள் தொழில் சார்வர் மெய்யே.''*

*– என்பது அவர் வாக்கு.*

*(புரிசை – மதில்களையுடைய; வரராசை – சங்கர நயினார் கோவில்; சன்னதம் – அவ்வம்மை திருச் சன்னிதானத்தில்; அம்புரி – நல்லனவற்றைச் செய்வீர்களாக; தொழில் – இன்பப் பேறு)*

## 13. மால் மணி மீ ஈயினும் கேட்பதன்றே

*பட பதக் கத்தன் சிலை மன்னுள் தாண்டவம் பண்ணுகின்ற*
*நட பத கத்து அன்றிலானைப் பகைத்த நயன் உண்ட*
*விட பது அக்கத்தன் தினம் பணி கோமதி மெய் அன்பர் மாள்*
*கிடப்ப தக்கது அன்றி மால் மணி மீ ஈயினும் கேட்ப தன்றே.*

*(பத – (காலற்ற) சார்பா பரணமுடைய; சிலை மன்னுள் – பொன்னம் பலத்துள்; நடபத – தூக்கிய திருவடி; அன்றிலான் – அன்றில் பறவை உகந்த மன்மதன்; மது அக்கத்தன் – பத்துக் கண்களையுடைய சிவன்; மீ – மேலுலகம்)*

படங்களையுடைய சர்ப்பத்தைக் கொண்ட சிவபெருமான், பொன்னம்பலத்துள் நடனமாடும் தூக்கிய திருவடியுடையவன், ஒலிக்கின்ற அன்றில் பறவையை உகந்த மன்மதனைக் கோபித்த முக்கண்ணையுடையவன், தேவர்கள் அச்சத்தைத் தவிர்த்து அவர்களைக் காப்பதற்காக உண்ட விஷத்தைக்

கழுத்திலே உடையவன், சிவபெருமான். அவனது தேவியாம் கோமதித்தாயே! உன் அடியார் கூட்டத்துடன் உன் கோயிலில் உன்னைத் துதித்துக் கொண்டிருப்பேன். திருமால் உலகமே கிடைக்கினும் வேண்டாம் என்கிறார், ரெட்டியார் சுவாமி.

திருமாலின் அழகிய மேலுலகத்தைக் கொடுத்தாலும் என் மனம் ஒப்புக்கொள்ளாது என்று பொருளில், **மால் மணி மீ ஈயினும் கேட்பதன்றே;** என்று கூறும் அவரது வாக்கு ஆழ்ந்து சிந்திக்கற்பாலது.

அப்படியானால் அவரது மனம் எதை ஒப்புக் கொள்கிறது?

பத்துக் கண்களையுடைய சிவபெருமான் எந்நாளும் தன் தேவியின் ஆற்றலுக்கேற்ப உலகை நடத்துகிறான். அந்தக் கோமதியம்மையின் உண்மையடியார்களுடன் அவளைத் துதித்துக் கொண்டு அவள் சந்நதியில் வாளா விழுந்து கிடப்பதே தனக்குத் தகுதியான செயலாகும். அதனையே அவரது மனம் ஒப்புக் கொள்கிறது.

*''... பது அக்கத்தன் தினம் பணி கோமதி மெய் அன்பர் மாள்*
*கிடப்ப தக்கது அன்றி மால் மணி மீ ஈயினும் கேட்ப தன்றே''*

- என்பது அவர் வாக்கு.

இந்தச் செல்வ வள நாட்டில் வாழும் மனிதர்கள் ஒரு இலட்சிய வாழ்க்கை நடத்தி உலக மக்களுக்கு வழிகாட்டித் தன்னை அடைய வேண்டு மென்றே ஞானிகளைத் தோற்றுவித்து அவர்களது இதயமாக விருந்து செயல்படுகிறான், இறைவன்.

"அர்ஜுனா! துன்புற்றோன், ஞானத்தைத்தேடுவோன், செல்வத்தை நாடுவோன், ஞானி - இந்த நாலு வகையான புண்ணியவான்களும் என்னை வழிபடுகின்றார்கள்" என்று கீதையில் கூறும் கண்ணன் 'ஞானி நானே என்பது என் மதம்' என்று (ஜ்ஞானித் - வாத்மைவ மே மதம்) கூறுகிறான். (கீதை அத். 7; சுலோ. 18)

அப்படியானால் ஞானியாகிய ரெட்டியார் சுவாமியின் அருள்வாக்கை இறைவனது வாக்காகவே நம்பிக்கையோடு நினைத்துப் போற்றி வாழ்க்கையில் கடைப்பிடிப்பதே நாம் அடையும் பிறவிப் பயனாகும் என்று கூறினால் மிகையல்ல.

அவரது வாக்கு, 'வைகுந்த வான் நாடு கிடைப்பினும் தேவையில்லை; கோமதித்தாயின் உண்மையான அடியார்களுடன் அவளைத் துதித்துக் கொண்டு, அவள் சன்னதியில் இருப்பதே என்பதாம்.

*''உரைக்க வல்லார்க்கு வைகுந்தமாகும் தம் ஊரெல்லாம்''*

*என்பது ஞானி நம்மாழ்வார் வாக்கு*

''இறந்த பிறகு சுவர்க்கத்திற்குப் போவோம்; நரகத்திற்குப் போவோம், என்பதை யார் கண்டார்கள்? இந்தத் துளசி நாசனுக்கு வாழ்நாளில் ராம நாம ஜபத்திலீடுபடுவதே சுவர்க்கமாகும்'' என்று பக்த துளசிதாஸ் கூறுவார். *(கோ ஜானே கோ ஜைக ஜமபுரகோ சுர புர பரதாம கோ! துளஸின் பஹு"தா பலோ லாகத ஜகஜீவன ராம குலாம கோ!!)*

*''செத்த பிறகு சிவலோகம், வைகுந்தம் சேர்ந்திடலாமென்று எண்ணியிருப்பர்*

*பித்த மனிதர். அவல் சொல்லும் சாத்திரம் பேயுரை யாமென்று இங்கு ஊதெடா சங்கம்*

*இத்தரை மீதிலே இப்பொழுதே முக்தி சேர்ந்திட நாடிச்*

*சுத்த அறிவினில் கழிப்பவர் தூயவரா மென்று இங்கு ஊதெடா சங்கம்''*

என்பார் பாரதியார்.

சுவாமிக்கு உண்டானது - மன பலத்தால் ஏற்பட்ட தவம். அதாவது, உற்றநோய் நோற்பது, உயிருக்கு இடையூறு செய்யாதது போன்ற இயல்புகள் ஏற்பட்டன. தவத்தால் உண்டானது - சிரத்தை. சிரத்தையால் வளர்ந்தது - கூரிய புத்தி. கூரிய புத்தியால் தோன்றியது - திட சங்கல்பம். திட சங்கல்பத்தால் ஏற்பட்டது - மனத் தெளிவு.

மனத் தெளிவால் உருவானது - சாந்த குணம். அந்த சாந்த குணம் உற்பத்தி செய்தது - உண்மை மறவாமையை. உண்மை மறவாமை என்ற நிலை உணரச்செய்தது - ஆத்ம அனுபவத்தை. அந்த ஆத்ம அனுபவத்தால் உண்டான்து பேரின்பம். அந்த பேரின்பம் சுவாமியை ஈடுபடுத்தியது - கோமதித்தாயின் திவ்ய மங்கள உருவ வழிபாட்டில்.

அந்த ஈடுபாடு வைகுந்த வான் நாடு இன்பம் உயர்வானது அல்ல என்ற எண்ணத்தை உண்டாக்கி விட்டது. சுவாமிக்கு **கோமதித்தாயின் உருவ வழிபாடே ஞான ஸாதன நிரூபணமாகி விட்டது.**

வாழும் காலத்தில் வாழ்க்கையின் சூட்சுமங்களை அறிவதே தெய்வ வழிபாட்டின் குறிக்கோளாகும்.

மரியாதை பெறுவதைவிட, எந்நிலையிலும் பிறருக்கு மரியாதை செலுத்திப் பணிவுடையவனாக, இன்சொல் உடையவனாக வாழ்வதே தெய்வ வழிபாட்டின் குறிக்கோளாகும்.

கூட்டுப் புறாத் தன்னைக் குளவி சிறைப்படுத்தி விட்டதே என்று ஓயாமல் அதனிடம் ஆத்திரப்பட்டுக் கொண்டேயிருந்து தன்மயமாகி, அந்தக் குளவி உருவைத் தானே அடைந்து விடும்.

அந்தப் புறாவைப் போல் தனக்குப் பாதகமான சூழ்நிலைகள் ஏற்பட்ட காலத்தும் பிறரிடம் ஆத்திரப்படாமல் பகவானிடமே ஆத்திரப்பட்டுக் கொண்டும், வெவ்வேறு உணர்ச்சிகளின் மீது சதா கால பகவத் சிந்தனையாலேயே அவனை அடைவதே தெய்வ வழிபாட்டின் குறிக்கோளாகும்.

ரெட்டியார் சுவாமி வாக்கைக் குரு அருளாலும், அனுபவங்களைச் சிந்தித்து உணர்வதாலும் நம்பி, வாழ்க்கையில் கடைப்பிடித்து வாழ வேண்டும்.

அப்பொழுது நம் உள்ளிருக்கும் தேஜோமயமான ஆத்ம சக்தி நம்மை எந்நிலையிலும் எக்காலத்திலும் கைவிடாது.

அதை உறுதியுடன் கடைப்பிடித்துக் கொண்டு பிரார்த்தனை உள்ளத்தோடு கோமதியம்மையாரைச் சரண் அடைய வேண்டும்.

அவளது திட்டத்தை நம் பக்திக்கேற்பவும், குரு அருளிற்கேற்பவும் மனத் தெளிவிற்கேற்பவும், ஈடுபாட்டிற்கேற்பவும் நிறைவேற்றி வைக்க நமக்கு உறுதியளிக்க வேண்டி, திடமான நம்பிக்கையுடன் அதில் வீர நடை போட ரெட்டியார் சுவாமியின் இதயக் குரல் கோமதி அந்தாதிப் பாடல்களின் மூலம் நம் செவிகளில் புகுந்து வாழ்க்கையில் ஓர் ஊன்றுகோலாக உதவும்.

வாழ்க்கைப் போராட்டமாகிய முக்கிய சந்திப்புகளில் குழப்பமேற்பட்டுத் திகைத்து நிற்கும் வேளையில் சுவாமியின் இதயக் குரல் சிந்தனை ஊற்றுக்களைப் பீரிட்டுக் கிளம்பச் செய்து மன வளத்தோடு வாழ வழிகாட்டும் என்பதில் ஐயமில்லை.

மூன்று போகம் விளையக் கூடிய விளைநிலம் மாதிரி செழிப்பாக மனவளத்தோடு, பொருள் வளத்தோடு இருக்க வேண்டியது – மானுட வாழ்வு.

அறிவியல் சாதனங்களின் மூலம் பொருள் வளம் வளர்ச்சியுற்று வந்தாலும், சாதி, சமய, வர்க்க பேதங்களால் மானுட வாழ்வு பாளம் பாளமாய் வெடித்து விரிசல் விட்டுக் கொண்டு போவதைத் தடுக்க, ஆன்மீக நெறிகளைப்

பரப்புவது இன்றியமையாத கடமைகளாகும். அந்தக் கடமைகளை நிறைவேற்ற இதுகாறும் பதின்மூன்று தலைப்புக்களில் ஒலித்த ரெட்டியார் சுவாமியின் இதயக் குரல் ஒலிகளின் சாராம்சத்தை உணர்வோம்.

நம் மனமாகிய ஒலி நாடாவில், 'ஆக்கப்பூர்வமான சிந்தனை' என்ற டேப் ரிக்கார்டு மூலம் பதிவு செய்வோம். ஆன்மீக நெறியில் நல்லதொரு உண்மைத் தொண்டனாக ஈடுபடுவோம்.

- சுவாமி தம்மைச் சுயப் பரிசோதனை செய்து கொண்டு நற்பண்புகளை விரிவுபடுத்திப் பலப்படுத்த சங்கரன் கோவிலில் எழுந்தருளியுள்ள அருள்மிகு ஏரம்ப விநாயகரைப் புகழ்ந்து பாடுகிறார்.
- அடியார்களைக் கோமதித்தாயின் முத்தாரமாகவும், அவர்களது ஞான வைராக்கியத்தை அவளது இளமை பொருந்திய தனபாரமாகவும் பாவனா சக்தியில் உந்தப்பட்டுக் கூறுகிறார்.
- பிரணவ மந்திரம் உபதேசம் செய்த முருகப் பெருமானைக் கோமதித்தாய் பெற்றமையால் அவளைத் தவிர மற்றோர் தெய்வம் நாட, என் மனம் துணியவில்லை என்கிறார்.
- அழகிய நெற்றியுடைய பெண்களின் மையலில் சிக்காமல் இருக்கக் கோமதித்தாயின் பெருமைகளைக் கூறும் பாடல்களைப் பாடச் சொல்கிறார்.
- கோமதித்தாயின் திருக் கண்களின் கடாட்சம் பெற்றவர்களே நடனத்தை இரசிப்பார்கள். நடன மாதுவை இரசிக்க மாட்டார்கள்.
- அடியார்களுக்கு அந்திம கால உபாதைகளோ, மன உபாதைகளோ கிடையாது, என்கிறார்.
- பாதகமான சூழ்நிலைகள் ஏற்பட்ட காலத்தும் இல் வாழ்வில் தம்பதிகள் ஒருவருக்கொருவர் பிரியாமல் உதவி செய்து கொண்டு வாழ வேண்டும் என்கிறார்.
- மனைவியைக் கணவன் கருணையின் ஊற்றாகவே பாவித்துக் குடும்பத்தில் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். காமக் கிழத்தியாகப் பாவித்து முக்கியத்துவம் கொடுக்கக் கூடாதென்கிறார்.

- மனத் தெளிவைப் பொறுத்து உண்டாவதே, நம் சாதனைகள். நம் சாதனைகளை வைத்தே உலகம நம்மை எடை போடுவதால் மனத்தைப் பக்குவப்படுத்த ஜெபம், தியானம், நாம சங்கீர்த்தனம் இயன்ற மட்டும் செய்ய வேண்டும் என்கிறார்.
- கோமதித்தாயை அடைக்கலம் அடைந்தால்தான் இரும்பால் ஆன விலங்கையொத்த பெண்களிடம் கொண்டுள்ள மையல், அவள் அருள் பெற்ற அரத்தால் அராவி விடுவிக்கப்படும், என்கிறார்.
- முத்தமிழில் கோமதியம்மையாரின் புகழைப் பாடும் பாடல்களின் தொகுப்பே தம் கழுத்தில் அணியும் 'பதக்க மாலை' என்கிறார்.
- அந்திம காலத்தில் அவளது நினைவை அவளே உண்டாக்க வேண்டும் என்று கூறுகிறார்.
- மனிதனது பலவீனங்களைப் பயன்படுத்தித் தவறான வழிகளில், தனிநபர் வழிபாடுகள் செய்துக் காரியங்கள் சாதிப்பதைக் கண்டனம் செய்கிறார்.
- பிரார்த்தனையின் சாராம்சம் தெளிவுபடுத்திப் பொருளுணர்ந்து ஈடுபடச் சொல்கிறார்.
- மேலுலக இன்பத்தைவிடக் கோமதியம்மையின் வழிபாட்டு இன்பமே உயர்வானது என்கிறார்.

வாழ்க்கை முடிந்த பிறகு நடப்பது என்ன என்பதைப் பற்றி அறிவதை விட வாழும் காலத்தில் மனித வாழ்க்கையின் சூட்சுமங்களை, இரகசியங்களை அறிந்து கொள்வதே தெய்வ வழிபாட்டின் குறிக்கோளாகும் என்று தெளிவுபடுத்துகிறார்.

*ரெட்டியார் சுவாமியின் கோதிலாத் தாள் மலரைக்*
*கொண்டாடுவோம்! தீதிலா நல்லோர் திரள் சேருவோம்!*

செங்நெல்குளம் க்ஷேத்திர நிவாஸாய மஹா யக்ஞ சொருபாய!
ஸ்ரீராம பக்த ஆஞ்சநேயாய மங்களம்!!

# காவடிச்சிந்து அண்ணாமலை ரெட்டியார் சுவாமியின் சரிதம்

*– புதுச்செந்நெல்குளம்* A. ஸ்ரீராமுலு தேசிகன்

கரிவலம் வந்த நல்லூர் ஒரு பழமையான ஊர். திருநெல்வேலி மாவட்டத்தில் சங்கரநயினார் கோவிலுக்கு அடுத்துள்ளது. அங்கிருந்து 6 கி.மீ. தொலைவில் சென்னிகுளம் என்ற ஒரு சிற்றூர் உள்ளது.

அந்த ஊரில் சென்னவ ரெட்டியார் – ஓவு அம்மையார் தம்பதிகளுக்கு அவர்களது வழிபடு தெய்வம் கழுகுமலை' முருகப்பெருமான் அருளால் 1865ம் ஆண்டு ஆறாவது குழந்தையாகப்பிறந்து கருவிலே திருவாய்க்கப் பெற்றுப் பின்னர் உலகம் போற்றும் காவடிச் சிந்து அண்ணாமலை ரெட்டியார் சுவாமி என்று புகழ் பெற்று விளங்கியது.

ஏர்பிடித்து உழும் உழவர் முதல், இயந்திரத் தனமாகப் பாடல்களின் பொருள் அறியும் சக்தியில்லாத பாமரன் முதல், உற்சாகத்தின் உச்சியிலே நின்று கொண்டு, நதியில் ஓர் இடத்தில் ஓடுகின்ற நீர் அடுத்த விநாடி வேறு இடத்துக்கு மாறி விடுவது போல் நிலையற்ற புத்தியடையவர்கள் முதல், மேடைகளின் மீது, பல வண்ணங்களின் மூலம் அழகு பெற்ற வானவில் போன்று பல விதமான இராகங்கள், பலவிதமான மெட்டுகளில் பாடி எல்லாத்தரப்பு மக்களைக் கவரும் பெயர் பெற்ற இசைக் கலைஞர்கள் வரை, இல்யித்துப் பாடி இன்பம் அனுபவிக்கும் சக்திவாய்ந்த பாடல்கள் அண்ணாமலை ரெட்டியார் சுவாமியின் காவடிச் சிந்து பாடல்கள். கனிந்த மொழியில் இறைவனின் இனிய் அனுபவங்களின் பெட்டகமாகத் திகழ்கிறது அப்பாடல்கள்.

ஐந்து வயது எட்டியதும் சென்னி குளத்தில் திண்ணைப் பள்ளி நடத்தி வந்த சிவகிரி சுப்பிரமணிய பிள்ளை என்பவரிடம் கல்வி கற்கத் தொடங்கினார். மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், திருப்புகழ் நிகண்டு அவரிடம் கற்றுக்கொண்ட முக்கிய பாடங்கள்.

'நினைவும் அறிவும், எல்லா வேதங்களாலும் அறிய வேண்டிய பொருளும் நானே; வேதாந்தத்தை ஆக்கியவனும் வேதத்தை உணர்ந்தவனும் நானே' என்கிறார் கீதாசார்யன். (அத். 15, சுலோ.15)

அந்த இறைவனருளால் எதையும் ஊன்றிக் கேட்டு நினைவில் வைத்துத் திரும்ப ஒப்புவிக்கும் சிறந்த அழுத்தமான நினைவாற்றல் நம் ரெட்டியார் சுவாமியிடம் மிகுந்திருந்தது.

சேற்றூர் அரசவைப் புலவர் இராமசாமிக் கவிராயரிடம் படித்தது இலக்கியங்கள். அவைகளிலுள்ள நயம், அமைதி, ஓசை இயல்பாகவே புலப்பட்டமையால் நாளடைவில் தாமாகவே பாட்டியற்றும் ஆற்றலும் அவருக்கு ஏற்பட்டது. சிறுசிறு செய்யுட்களையும் சமயம் நேரும் போது பாடி வரலானார். படிக்கும்போது விளையாட்டிலும் வல்லவராகத் திகழ்ந்தார்.

வீட்டு வேலைகளைக் கவனிக்காமல் விளையாட்டிலேயே ஈடுபட்டதைத் தந்தையார் கண்டிக்கவே வீட்டிற்கு வராமல் சேற்றூர் சமீந்தார் அரண்மனைக்கே நேராகப் போய்விட்டார்.

சமீந்தார் சுந்தரதாஸ் பாண்டியர் ரெட்டியார் சுவாமிக்கு எல்லா வசதிகளும் செய்து கொடுத்துத் தங்க வைத்துக் கொண்டார்.

ரெட்டியார் சுவாமியைப் பற்றி ஒன்றும் தெரியாததால் அரண்மனையில் உள்ளவர்கள் அவரைத் தக்கவாறு உபசரிக்கவில்லை. சாப்பாடு தரக்குறைவாகவும் கீரைக்குழம்பு பயனற்ற முறையிலும் இருந்தது. சமீந்தார் உபசார முறை கேட்கவே, உள்ளத்தால் பொய்யாது ஒழுகும் நம் ரெட்டியார் சுவாமி கூறலானார்.

தனக்கு அமைந்த பணியில் தன்னையே ஐக்கியப்படுத்திக் கொண்டு மற்ற எந்த சிந்தனையிலும் இறங்காமல் சிரத்தையுடன் ஈடுபடும் பாங்கே ஒழுங்கான சிந்தனையோட்டமாகும்.

அந்த ஓட்டம் மனிதனின் செயல்களில் யாவற்றிலும் ஊடுருவும். அவனது உண்மையான உருவத்தை வெளிக்கொணரும். ஏதேனும் அசம்பாவிதம் நேர்ந்தாலும் தன் எதிர்ப்பை ஒழுங்கும் கண்ணியமும் பொருந்திய வகையில்தான் வெளிக்காட்டும்.

இலக்கிய இன்பத்தில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டு ஒழுங்கான சிந்தனையோட்டத்தில் தமக்கு உணவு விசயத்தில் நேர்ந்த அசம்பாவிதத்தைப் பாடல் மூலம் சமீன்தாரிடம் வெளிப்படுத்தினார் நம் ரெட்டியார் சுவாமி

*கீரை எனும் குழப்பதனால் மனம்குழம்பி*
*செமியாமல் கிலேச முற்றேன்*
*ஆரையினி நோவதையா? உலகினிலே*
*இதுவும் என்றன் அதிர்ஷ்டந்தானே*

இதைக் கேட்டதும் ரெட்டியார் சுவாமியைத் தம் வேலையாட்கள் சரியாக உபசரிக்காததைப் புரிந்து கொண்ட சமீந்தார் அடிக்கடி அவரது மேற்பார்வையில ரெட்டியார் சுவாமியைக் கவனிக்கலானார்.

அங்கு முகவூர் மீனாட்சி சுந்தரக் கவிராயர் நட்பு கிடைத்தது. இருவரும் திருவாவடுதுறை ஆதினத் தலைவர் மேலகரம் சுப்பிரமணிய தேசிகரின் மாணவர்களாகச் சேர்ந்து அங்கு திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் தமிழ் கற்றார்கள். அவரது மாணவராகிய டாக்டர் உ.வே. சுவாமிநாத ஐயர் அவர்களிடம் நன்னூலையும், மாயூரத் தலபுராணத்தையும் முறையாகப் பாடங்கேட்டார்.

காங்கிரீட் கல்வைக்கு சிமெண்ட், மணல், மற்றும் கருங்கல், ஜல்லி மட்டுமே தேவையான வலுவைக் கொடுப்பதில்லை. இரும்புக் கம்பிகள் சிமெண்ட் காங்கிரீட்டில் பதிக்கப்படும்போது அந்தக் கலவை கூடுதல் வலு பெறுகிறது.

அதுபோல் திருவாடுதுறை ஆதினத்திற்குப் பல திசைகளிலிருந்து இசைப் புலவர்கள் பலர் வந்து தங்கள் புலமையை வளர்த்துப் பரிசுகளுடன் சென்றாலும், ஆதினம் வலுப்பெற வில்லை. இரும்புக் கம்பிகள் சிமெண்ட் காங்கிரீட்டிற்கு வலிமை சேர்ப்பது போல் சென்னிகுள நகர் வாசன், தமிழ்தேறும் அண்ணாமலை தாசன், செப்பும் செக மெச்சிய காவடிச்சிந்து பாடல்கள் பக்தர்களின் இதயங்களில் சேர்ந்த பின்பே ஆதினத்தின் புகழ் வலுப்பெற்றது.

ரெட்டியார் சுவாமி கல்லாடஞ் சாமியார் என்ற அடியாரிடம் ‘கல்லாடம்’, என்ற நூலைக் கற்றார். **“கல்லாடம் கற்றாரோடு சொல்லாடாதே”** என்பது ஒரு முதுமொழி. நம் சுவாமி தம் புலமையைக் காட்டி அம்முதுமொழியை மெய்ப்பித்தார்.

சென்னிகுளத்தில் சுந்தரப் பரதேசியார் என்ற சாமியார் இருந்தார். அவர் அண்ணாமலை ரெட்டியர் சுவாமியின் புலமையையும் இசையறிவையும் கண்டு மகிழ்ந்தார். ஊற்றுமலை மன்னரிடம் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தினார்.

ஊற்றுமலை குறுநில மன்னர் இருதாலய மருதப்பத் தேவர். அவருக்கு ரெட்டியார் சுவாமியிடம் தனி அன்பு ஏற்பட்டது.

ஊற்றுமலை என்பது நெல்லை மாவட்டம் தென்காசி வட்டத்தைச் சேர்ந்த வீரகேரளம்புதூர் ஆகும். அங்கு புலவர்கள் பலர் வந்து மன்னரைச் சிறப்பித்துப் பாடிப் பரிசுகள் பெற்றுச் செலவது வழக்கம். அதே முறையில் ரெட்டியார் சுவாமி பல சமயங்களில் பல்வேறு காரணங்களுக்காகப் பாடிய பாடல்கள் முந்நூறுக்கு மேலுள்ளன. அப்பாடல்களை ஊற்றுமலை தனிப்பாடல் என்ற நூலில் காணலாம்.

கற்றவர்களுள் யாரேனும் ஒருவர் சிறிது முயற்சி செய்து சாதனைகளில் இறங்கினால், உடனேயே மற்றவர்களுக்கு அவர்பால் அசூயையும் பொறாமையும் எழும்பி அவமதிக்க முயல்வார்கள்.

ஊற்றுமலைக் குறுநில மன்னர் அதற்கு விதிவிலக்காக இருந்தார். ரெட்டியார் சுவாமிக்குத் தக்க சமயங்களிலெல்லாம் உதவிய பெருமை ஊற்றுமலை குறுநில மன்னரையே சாரும்.

திருநெல்வேலிக் கருகிலுள்ள இராசவல்லிபுரம் என்ற ஊரிலுள்ள முத்துச்சாமிப்பிள்ளை என்ற வள்ளல் பெருமானாருடைய நட்பும் நம் சுவாமிக்குக் கிடைத்தது. திருநெல்வேலி நெல்லையப்பக் கவிராயர் என்ற வள்ளல் ஒருவர் நட்பையும் நம் சுவாமி பெற்றார்.

கஷ்டப்பட்டுத் தன் முயற்சியில் நிந்துதல் கற்றுக்கொள்ளலாம். அனுபவம் முதிர்ந்தவர்கள் உதவியாலும் கற்றுக்கொள்ளலாம். அவர்கள் இடுப்பைச் சுற்றி ஒரு கயிற்றைக் கட்டி, முதலில் முழங்கால் அளவு, பிறகு இடுப்பளவு, அதன் பிறகு மார்பளவு தண்ணீரில் வரச் சொல்வார்கள். உனக்குப் போதுமான அளவு தைரியம் வந்தவுடன் நீந்தப் பயிற்சி அளித்து வழிகாட்டுவர். காலம் செல்லச் செல்ல நீந்தும் ஆற்றலை நீ பெற முடியும்.

அதுபோலவே வாழ்க்கையிலும் நமக்கு வழிகாட்ட இறையருளும் செழுங்கருணை ஓடிப் பெருகும் உள்ளமும் செல்வமும் ஒருங்கே பெற்ற ஆன்மீக சிந்தனையிலீடுபடும் முதிர்ந்தவர்களது ஆசீர்வாதமும் இருந்தால் எளிதான முறையில் நமக்குக் கடமையாகச் செய்யும் கர்மங்களில் அபரிமிதமான முன்னேற்றம் பெற முடியும். அவ்விதம் இல்லாவிடில் கஷ்டப்பட்டுத்தான் முன்னேற்றம் பெற முடியும்.

ரெட்டியார் சுவாமிக்கு இறையருளும் கருணை உள்ளமும் செல்வச் செழிப்பும் பெற்ற ஆன்மீகச் சிந்தனையிலீடுபட்ட முதிர்ந்த வள்ளல்கள், புலவர்கள் வழிகாட்டி அவ்வப்போது வேண்டிய உதவிகள் செய்து வந்தமையால் தம் புலமை வாழ்க்கையை சிறப்புற நடத்த முடிந்தது. நிறைந்த பரிசுகள் பெற முடிந்தது. குறுகிய காலத்தில் அதி உன்னத வளர்ச்சி அடைய முடிந்தது.

பலர் போற்றிப் புகழோடு வாழ்ந்து வந்த காலத்தில் இறைவனைப் பற்றி எண்ணவும் ஒரு வாய்ப்பைப் பெற விரும்பினார். திருவாவடு துறைக்குச் சென்று சுப்பிரமணியப் பண்டார சந்நிதிகளிடம் உபதேசம் பெற்றுச் சிலகாலம் அங்கு தங்கியிருந்து பின் விடை பெற்றுப் பிரிந்தார். அவ்வாறு பிரியும் பொழுது பல நயமான நுண்ணிய கருத்துக்கள் பொதிந்த பாடல்களைப்பாடி, தம் குருநாதரைப் புகழ்ந்தார். **"உலகத்தில் வாழ வேண்டும்; உலகத்திலிருந்து தெரிந்து கொள்ள வேண்டும். ஆனால் உலகத்துடன் ஒட்டிக் கொள்ளக் கூடாது"** என்ற ஆன்மீக நெறியில் தோய்ந்த நம் ரெட்டியார் சுவாமிக்கு நயமான, நுண்ணிய கருத்துக்களுடன் பாடல்கள் அமைவதில் ஆச்சரியமில்லை. அவற்றுள் ஒரு பாட்டு வருமாறு:-

*அரசனகர் ஆதியர்முன் போற்றவட*
*வாலமர்ந்த அமலா! தென்பால்*
*அரசனக ராவைவென்ற விடைமதிச் செஞ்*
*சடைகரந்திவ் வவனி போற்ற*
*அரசனக ரார்ந் தொளிர் சுப் பிரமணிய*
*குருமணியே அடிமை யேன்நான்*
*அரசனக ராகமக லக்கடைக்கண்*
*கருணைபுரிந் தாளு வாயே*

என்பதாம். இதில் "அடியேன் நான் அரசன்" என்ற பகுதிக்குப் பொருள் விளங்காமல் எல்லோரும் திகைத்திருக்கும்பொழுது, 'அரசன்' என்பதற்கு இரசமற்றவன் என்ற பொருள் கூறி யாவரையும் மகிழ வைத்தார். பண்டார சந்நிதி அவர்கள் ரெட்டியாரின் புத்திக்கூர்மையைப் புகழ்ந்து **"நீர் சாதியிலும் ரெட்டி, புத்தியிலும் ரெட்டி"** என்று கூறிப் பலவாறு புகழ்ந்து தக்க பரிசுகளையும் வழங்கி விடை கொடுத்தனுப்பினார்.

நிகழ்ச்சி நிரல்களின்படி பட்டியலிட்ட சம்பவங்களின் தொகுப்பல்ல வாழ்க்கை. எதிர்பாராமல் வரும் வாய்ப்புகளின் தொகுப்பே வாழ்க்கை. 'காலமும் பயனும் நானே' என்று கூறும் கண்ணன் அருளால் அதனைப் பயன்படுத்திக்

கொளள வேண்டும். அதற்குப் படிப்பு, அறிவு, ஆற்றல் மட்டும் இருந்தால் போதாது. நிகழ்காலத்திறகேறப விழிபபுணர்வு வேண்டும். இறைவனது திருவருளும் மனிதர்களின நலலாசியும் வேண்டும்.

ரெட்டியார் சுவாமியிடம் அபரிமிதமாக இருந்தது. அது அவரது சமத்காரமான பேசசுக்களிலிருந்து வெளிப்படுகிறது.

ஒரு சமயம் மதுரையில் குன்னூர் குமாரசாமி முதலியார் என்ற புலவர் வீட்டில் புலவர்களுடன் இன்பமாய்க் கலந்து உரையாடிக் கொண்டிருக்கும்போது அந்த வீட்டில் ஒருவர் மற்றொருவரை, "ஏ சுந்தரம்" என்று அழைக்க, அதைக் கேட்டதும், **"ஏசுந்... தரமா? எது"** என்று சிறிதும் தாமதியாது வியப்புத் தோன்றக் கேட்டு, அங்குள்ளோர் யாவரையும் ரெட்டியார் சுவாமி மகிழ்ச்சிக் கடலில் அழுக்கினார்.

போக்கு வரவு வசதிகள் இல்லாத சமயத்தில் ஊற்றுமலையிலிருந்து ரெட்டியார் சுவாமி திருநெல்வேலிக்கு நடந்தே வர, ஊற்றுமலை ஜமீன்தாரும் நெல்லை வந்த செய்தி அறிந்து அவரைப் பார்க்கச் சென்றார். பல புலவர்களுடன் பேசிக் கொண்டிருந்த ஜமீன்தாரைக் கண்டதும், **'வாடா மருதப்பா'** என்று கூறினார். புலவர்கள் திகிலடைந்தனர். 'இப்படி அவமரியாதை செய்யலாமா?' என எண்ணி மனம் துன்புற்றனர். ஆனால் ரெட்டியார் சுவாமியின் நுண்மான் நுழைபுலம், நல்லியல்புகளை அறிந்த ஜமீன்தார் யாதொரு மனக்கிலேசமும் கொள்ளவில்லை.

புலவர்களின் முகக் குறிப்பைத் தெரிந்து கொண்ட சுவாமி "எவ்வளவு துன்பம் வந்தாலும் அவர் இன்புற்றிருப்பாரே அல்லாமல் துன்பத்தால் வாட மாட்டார். ஆகவே 'வாடாத தன்மையை நல்லியல்பாகக் கொண்ட மருதப்பத் தேவரே' என்று நான் புகழ்ந்தேனே தவிர, வேறு தகாத சொற்கள் ஒன்றும் கூறவில்லை" என வாடா மருதப்பா என்ற தொடருக்குரிய விளக்கத்தை ரெட்டியார் சுவாமி விளக்கினார்.

நான் முட்டாளோடு கூடி நெல்லைக்கு வந்தேன் என்று கூற புலவர்கள் திகைக்க, காலில் தைத்த முள் தாளுடன் (முள் + தாள் = முட்டாள்) நெல்லைக்கு வந்தேன் என்று தமது சமத்காரப் பேச்சுக்களால் புலவர்களை வியப்பில் ஆழ்த்தினார் நம் சுவாமி.

ஏழைகளுக்கு உதவ இரக்கம் கொண்ட ரெட்டியார் சுவாமி ஒரு ஏழையின் திருமணத்திற்கு மருதப்பத் தேவரிடம் கேட்ட பொருள்களில் ஒன்று நடக்கும், ஒன்று நடக்காது என்று கூற, அவ்வேழை 'நமக்காகப் பரிந்து பேச வந்த ரெட்டியார் சுவாமியே அரிசி, ஆடு ஆகிய இரு பொருள்களுள் ஒன்றுதான் தர முடியும். மற்றொன்றைத் தர முடியாது என்று கூறிவிட்டாரே என நினைத்து மிகவும் துன்புற்றான். குறிப்பால் உணர்த்த நம் சுவாமி அவ்வேழை கேடகும் பொருள்களில் அரிசி நடக்கும் தன்மையற்றது. ஆடு நடக்கும் தன்மையுள்ளது என்று விளக்கம் கொடுத்தார். எல்லோரும் அப்பேச்சினைக் கண்டு மகிழ்ந்தனர்.

ஒரு சமயம் ரெட்டியார் சுவாமி மருதப்பதேவரிடம் பேசிக் கொண்டு இருந்தபோது முன்பின் அறிமுகமாகாத பெண் ஒருத்தி ஒரு தட்டில் தங்கச் சிவந்திப் பூக்களை ஏந்திக் கொண்டு வர அவளைக் கண்டதும் நம் சுவாமி, **'தங்கச்சி வந்தியா'** என்று அழைத்தார். அவள் திகைத்து நிற்கவே, அடுத்த மறுகணமே, **'தங்கச் சிவந்தியா'** எனக் கேட்டு அவள் திகைப்பைப் போக்கினார். தேவர் இந்நிகழ்ச்சியை பலமுறை பலரிடம் கூறி ரெட்டியார் சுவாமியின் பேராற்றலைப் புகழ்ந்ததுண்டு.

, கழுகுமலை முருகன் அருளால் தோன்றிய நம் ரெட்டியார் சுவாமி, 'சிந்து' என்ற இசையில் அமைத்து முருகன் புகழ் கூறும் பாடல்கள் பல பாடுவார். அவை பிற்காலத்தில் எல்லா மக்களாலும் போற்றிப் படிக்கப்பட்டன. அண்ணாமலை ரெட்டியார் சுவாமியின் காவடிச் சிந்தினைப்பாடாத மக்கள் யாவரும் இலரென்றே கூறலாம் .

மற்றவர்களை ஒப்பிட்டு எடை போடுவதில் காலத்தைச் செலவழித்துக் கொண்டிருந்தால், அவர்களை நேசிக்க நேரமில்லாமற் போகும் என்பது மறுக்க முடியாத உண்மையே.

நேசிக்கும் அளவிற்கு முக்கியத்துவம் வாய்க்கப் பெற்றவராயிருந்தால் மற்றவர்களோடு ஒப்பிட்டு எடை போட மாட்டார்கள் அல்லவா?

ஆம்! ரெட்டியார் சுவாமியின் காவடிச் சிந்து பாடல்களோடு ஒப்பிட்டு எடைபோட்டு நேசிக்கும் அளவிற்கு வேறு பாடல்கள் இல்லை. இசை மேதை திருமதி. M.S. சுப்புலட்சுமி அவர்களால் ஐக்கிய நாட்டுச் சபையில் நடைபெற்ற இன்னிசைக் கச்சேரியில் பாடப்பட்ட பாடல், காவடிச் சிந்து பாடல், என்பது செவி வழிச் செய்தியாகும்.

புலவன் ஒருவன் பாடிய பாட்டை அவன் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே பலரும் மெச்சுவது என்பது இயல்பாகவே நிகழாத தொன்றாகும். ஆனால் அண்ணாமலை ரெட்டியார் சுவாமியைப் பொருத்தமட்டில் அவ்வாறின்றி அவர் வாழ்நாளிலேயே காவடிச் சிந்து பாடல்களுக்கு மிகப் புகழ் கிடைத்தது.

**"பூமி மெச்சிடும் அண்ணாமலைக் கோர் துணையானவன்"** என்ற அவர் வாக்கே அதற்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

இக் காவடிச் சிந்தினைத் தக்க பக்க வாத்தியங்களுடன் பாடினால் காவடி கொண்டுவோர் மட்டுமின்றி கேட்போரும் இசைவயப்பட்டு இன்புறச் செய்வது திண்ணம். அவ்வாறு சொல்லழகு, ஓசைநயம், மிகுந்த பாடல்களாக அக் காவடிச் சிந்து பாடல்கள் காணப்படுகின்றன. தமிழ் இலக்கண வரம்பு கெடாது பாமரரும் தெரிந்து கொள்ளத்தக்க நிலையில் எளிய நடையில் இப்பாக்கள்

உலகியலைச் சிறப்பாகப் பலவிதங்களில் இப்பாக்களில் ரெட்டியார் சுவாமி குறிப்பிட்டிருக்கிறார். இன்றியமையாத இடங்களில் பழமொழிகளையும் மேற்கொண்டிருக்கிறார். சுவாமி இளமையில் பார்ப்பதற்கு மிக அழகாக இருப்பார். **குருவம்மாள் என்னும் பெண்ணின் நல்லாளை** இவருக்கு வாழ்க்கைத் துணைவியாக்கினர். இருபத்து நான்கு வயதில் திருமணமான ரெட்டியார் சுவாமி இரண்டு ஆண்டுகளே இவ்வுலகத்துயிருடன் இருந்தார். காசநோயால் பாதிக்கப்பட்டு 1891ம் ஆண்டு தை அமாவாசை அன்று இவ்வுலகினின்று பிரிந்தார். அவர் பூத உடல் அழிந்தாலும் புகழுடல் என்றும் நிலைபெற்றிருக்கும். தமிழ்நாட்டில் காவடிச் சிந்து உள்ளவரை ரெட்டியார் சுவாமியின் புகழ் ஓங்கி விளங்கும் என்பதில் ஐயமில்லை.

வாழ்க ரெட்டியார் சுவாமியின் புகழ்!





ஸ்ரீ

ஸ்ரீ கிருஷ்ணாய துப்யம் நமஹ!

# கீதையின் நோக்கில் வாழ்க்கை என்பது என்ன?

## கவனிப்போம்! சிந்திப்போம்! செயல்படுவோம்!

| | | |
|---|---|---|
| 1. | வாழ்க்கை என்பது ஒரு சவால் | அதனைச் சந்திப்போம். |
| 2. | வாழ்க்கை என்பது ஒரு பரிசு | அதனை ஏற்றுக் கொள்வோம். |
| 3. | வாழ்க்கை என்பது ஒரு துணிகர செயல் | அதனை எதிர்கொள்வோம். |
| 4. | வாழ்க்கை என்பது துன்பம் | அதனை வெற்றி கொள்வோம். |
| 5. | வாழ்க்கை என்பது துயரம் | அதை எதிர் நிற்போம். |
| 6. | வாழ்க்கை என்பது கடமை | அதைச் செய்வோம். |
| 7. | வாழ்க்கை என்பது விளையாட்டு | அதை விளையாடுவோம். |
| 8. | வாழ்க்கை என்பது புரியாத நிலை | அதை தீர்த்து வைப்போம். |
| 9. | வாழ்க்கை என்பது கவிதை | அதைப் பாடுவோம். |
| 10. | வாழ்க்கை என்பது வாய்ப்பு | அதைப் பயன்படுத்துவோம். |
| 11. | வாழ்க்கை என்பது பயணம் | அதை முடிப்போம். |
| 12. | வாழ்க்கை என்பது உறுதிமொழி | அதை நிறைவேற்றுவோம். |
| 13. | வாழ்க்கை என்பது அன்பு | அதை அனுபவிப்போம். |
| 14. | வாழ்க்கை என்பது அழகு | அதை ஆராதிப்போம். |
| 15. | வாழ்க்கை என்பது உத்வேகம் | அதை வெளிப்படுத்துவோம். |
| 16. | வாழ்க்கை என்பது இழுபறி | அதை எதிர்த்துப் போராடுவோம். |
| 17. | வாழ்க்கை என்பது புதிர் | அதை அவிழ்ப்போம். |
| 18. | வாழ்க்கை என்பது எல்லை | அதை அடைவோம். |

★ விண்மீனைக் கண்டே கடலில் திசைதெரியாது மயங்கும் கப்லோட்டிகள் திசைகாட்டி மூலம் வடதிசை அறிந்து, அதிலிருந்து எல்லாத் திசைகளையும் புரிந்து தெளிவடைவார்கள். அதுபோல வாழ்க்கையில் பிரச்சினைகளைச் சந்திக்கும் பொழுதே சம்சாரக் கடலில் தீர்க்கும வழி தெரியாமல் மயங்கும் சம்சாரிகள், ரெட்டியார் சுவாமியின் இதயக் குரலைக்கேட்டு, அதிலிருந்து எல்லா வழிகளையும் புரிந்து, மயக்கம் நீங்கித் தெளிவடைவார்கள்.

★ மது போதை கொண்டவன் இடையில் உடை இருக்கிறதா என்று அறிய மாட்டான், அவனைப் போல் உள்ளம் இறை இன்பத்தில் பரவசப்பட்டுப் பக்தியுணர்வில் மூழ்கும் பக்தன் உடலோடு இருந்தாலும், அந்த உடற்பற்றை உணர மாட்டான். அப்படி உணரவிடாமல் ஆன்மவொளிக் கடலில் மூழ்கித் திளைக்கச் செய்யும் குரல் - ரெட்டியார் சுவாமியின் இதயக் குரல்.

★ அவரவரும் தத்தமக்கு விதிக்கப்பட்ட வேலைகளைப் போட்டிப் பொறாமைகளின்றி இறைவனுக்கு அர்ப்பணமாகச் செய்து, தவமும், மங்கள குணமும் துஷ்ட நிக்ரஹமும் நிரம்பி, அகங்காரத்தின் பற்றொழிக்கப்பட்டு வாழ, வழிவகுக்கும் குரல் - ரெட்டியார் சுவாமியின் இதயக் குரல்.

*- ஸ்ரீ அனுமந்த் உபவாசி எஸ். மகாலட்சுமி அம்மாள்*
புதுச் செந்நெல்குளம்.



*நாராயணா கம்ப்யூட்டர் பிரஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்.,* ☎ 621772